# சகாதேவ நிமித்த சூடாமணி



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 231

**சகாதேவ நூல் என்னும்**

# சகாதேவ நிமித்த சூடாமணி

**(ஆருட சாத்திரம்)**

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர்
கல்வெட்டுக் கலைஞர்
தமிழக வரலாற்று அறிஞர், கணியனார்
கரந்தை பேராசிரியர் **சி. கோவிந்தராசனார்**
தமிழியல் புலம்
மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை



*தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்*

**சரசுவதி மகால் நூலகம்,**

தஞ்சாவூர்.

2007 விலை : ரூ.70/-

# நூல்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : சகாதேவ நிமித்த சூடாமணி |
| பதிப்பாசிரியர் | : சி. கோவிந்தராசனார் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : 231 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : நான்காம் பதிப்பு |
| வெளியீடு | : 2007 |
| தாள் | : டி.என்.பி.எல். 18.6 கி. |
| நூல் அளவு | : 24 X 14 செ.மீ. |
| பக்கங்கள் | : 183 |
| படிகள் | : 500 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : சரசுவதி மகால் நூலக ஒளியச்சகம் |
| புத்தகக் கட்டு | : மெலிந்த அட்டை |
| பொருள் | : சோதிடம் |
| பகுப்பு | : P 15,C : 3 P 07 |
| விலை | : ரூ.70/- |

# வெளியீட்டாளர் முகவுரை

எண்ணற்ற இலக்கிய நூல்களையும், இலக்கண நூல்களையும், மருத்துவ நூல்களையும், சோதிட நூல்களையும் ஓலைச்சுவடிகளில் இருந்து நூல்களாகப் பதிப்பித்து வெளியிடுகின்ற மகத்தான பணியினை சரசுவதி மகால் நூலகம் மேற்கொண்டு வருகிறது.

அவ்வகையில் 1986ஆம் ஆண்டில் முதற்பதிப்பாகப் பதிப்பித்து வெளியிடப்பெற்ற சகாதேவ நிமித்த சூடாமணி என்னும் இச்சோதிடநூல் தற்போது நான்காம் பதிப்பாக வெளியிடப்படுகிறது.

சகாதேவ நிமித்த சூடாமணி என்ற தலைப்பில் பேராசிரியர் சி. கோவிந்தராசனார் அவர்களது பதிப்புப் பணியில் உருப்பெற்றுள்ள இந்நூல், தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தின் சிறந்த வெளியீடுகளுள் ஒன்றாகும். ஆரூடம் என்னும் சோதிட வகை ஒன்றினைச் சார்ந்து எழுந்துள்ள இச்சகாதேவ நிமித்த சூடாமணி எளிய முறையில் தெளிவாகவும், செவ்வையாகவும் பதிப்புருப்பெற்று பொதுமக்களின் பயனுக்குரித்தாக்கியிருப்பது குறித்து மகிழ்கிறேன்.

தமிழ்ப்புலம் தரணியின் முதற்புலம் என்பது தமிழ்ச் சிந்தனையாகும். முதன்மை அறிவாக்கப் பக்க விளைவுகளுள் ஒன்றாகத் திகழும், இறைமையுணர்வுடன் கூடிய எண் கணித சோதிடம் அறிவாலும், உணர்வாலும் ஒருங்கே அனுபவிக்கத் தக்கதாகும். அம்முறையில் அமைந்துள்ள இச்சகாதேவ நூலைத் தம் தனி நுட்ப அறிவின் விளக்கத்தால் துலங்கப் பதிப்பித்து நம் கரங்களில் திகழச் செய்துள்ள பேராசிரியர் கணியனார் திரு. சி. கோவிந்தராசனாருக்கு நன்றி கூறி மகிழ்கிறேன்.

இத்தகைய நூல்களை வியக்கதக்க அளவில் அச்சுருவாக்கும் சரசுவதி மகால் நூலக நிருவாக அதிகாரி மற்றும் வெளியீட்டு மேலாளர் பொறுப்பு வகிக்கும் சைவத்தமிழ்ப் புலவர் திரு. சாமி.சிவஞானம், எம்.ஏ., அவர்களுக்கும், நூலகக் கணினிப் பிரிவினருக்கும் மற்றும் இந்நூல் நன்முறையில் வெளிவர துணைநின்ற அனைவருக்கும் என் நன்றி. இத்தகைய அரிய நூல்களை நன்முறையில் வெளிக்கொணர நிதியுதவி நல்கும் மைய அரசுக்கும் என் நன்றி.

தஞ்சாவூர்
23.7.2007.

**ந. முத்துக்கருப்பன்,** எம்.ஏ.,
மாவட்ட ஆட்சித்தலைவர்(பொ)
மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.



# பொருளடக்கம்

# நூல் வாயில்

உலகில் நிலவும் மானுட வாழ்வியலை இரண்டு பிரிவாகக் காண்பர். ஒன்று பந்த பாசங்களில் பதிந்து நிற்பது. மற்றொன்று அவற்றினின்றும் நீங்கி இறைமையொடு இணைந்து நிற்பது; முன்னது இல்லறம் மற்றது துறவறம். இல்லறத்தான், பெண்டு, பிள்ளை, சொத்து, சுகம் ஆகியவற்றால் கட்டுண்டு ஆசைவழிச் செயல்படுகின்றான். மாய்கைக் கிடனான மனத்தில் எச்செயலைச் சிந்திப்பதாயினும் அதற்கொரு ஆதரவினைத் தேடுகின்றான். முன்னறிவிப்புப் பெற விரும்புகின்றான். இதற்கமைந்த துணைக் கருவிகளாகவே அறநெறிகளும், சாத்திரங்களும் அமைந்திருக்கின்றன.

துறவிகளும் முனிவர்களும் ஆசைகளைத் துறந்தாராயினும் பிறர்க்குரிய நலனைக்கருதி, அன்புணர்வமைந்த பற்றுள்ளத்தாராகவே இருந்துள்ளனர். தனக்கென வாழாது பிறர்க்குரியராகும் பெற்றியுடன் ஞானத்தாற் கண்டறிந்த உண்மைகளை கல்வி, மருத்துவம், சோதிடம் கலைஞானம், யோகம் ஆகிய நிலைகளில் நூல்களாக அருளிச் செய்துள்ளனர்.

மூப்பு பிணி சாக்காடு என்னும் முத்திறனே கண்டு தொடரும் மக்களினத்திற்கு இந்நூல்களை அருந்துணையாகச் செய்துள்ளனர். இவற்றுள் உலகின் காலநிலையைப் பாகுபடுத்திக் கண்டறியும் கணக்கியல் நூலாகத் திகழ்வதே சோதிடக் கலை நூலாகும். இந்நூலின் ஒரு பகுதியே மனிதனின் வாழ்நாளின் காலவகை நிலைகளைக் கணக்குடன் விளக்கமாக அறிவிக்கும் சாதகமாகும். கடல் போன்ற சாதகத்தின் கருத்துத் தொகுப்பாகும். தெய்வீக சூட்சமக் குறிப்பு அறிவிப்பே நிமித்த சாதகமாகும். இதனையே 'ஆருடம்' என்றும் குறித்துக்காண்பர்.

**நிமித்தம் :**

நிமித்தமென்பது மக்களின் வாழ்க்கைக்கமைந்த நிகழ்ச்சிகளை, செயல்களை, கால நிலையுடன் வகைப்படுத்தித் திட்டமாகவும் முன்னறிவாகவும் உணர்த்தும் உபாயம் அல்லது அறிவிப்பாகும்.

தமிழகத்தில் சங்ககாலத் தமிழர்கள் நிமித்தம் பார்க்கும் வழக்கினைக் கொண்டிருந்தனர் என்பதனை அக்கால இலக்கியங்கள் அறிவிக்கின்றன. போருக்குச் செல்லும் வீரனுக்கும், பொருள் பெறச் செல்லும் புலவனுக்கும் நிமித்தம் பொருத்தமாகக் காணப்பட்டுள்ளது. கரிக்குருவியும் காக்கையும் நிமித்தப் பறவைகளாக இருந்துள்ளன. கால நிலைகளைக் கணித்தறிந்திருந்ததனை, 'புள்ளும் பொழுதும் பழித்த லல்லது. உள்ளிச்

சென்றோர் பழியலர்' என்று கூறிய புறநானூற்றுப் புலவனது வாக்கால் அறியமுடிகின்றது. சான்றோர்கள் வாழ்ந்திருந்து அக்காலத்து மக்களுக்கே காலப்பலனும், சகுனப்பலனும் தேவைப்பட்டதென்றால், அறியாமையும், ஆசை நெறிகளும் பெருகிநின்று தாண்டவமாடும் இக்காலத்து மக்களுக்கு நிமித்த சாதகம் மிகவும் இன்றியமையாததொரு துணையாகுமென்பது அறியத்தக்கதாகும்.

நிமித்தச் சுவடிகள் :

தமிழில் நிமித்தச் சுவடிகள் பலவுள்ளன. அவற்றுள் அகத்தியர் தொடுகுறி சாத்திரம், சித்தர் ஆருடம், காக்கையர் ஆருடம், சட்டைமுனி சோதிடம், நிமித்த சூடாமணி என்பன குறிப்பிடத்தக்கனவாகும்.

ஆருடம் காணும் நூலாகும் நிமித்த நூல்களில் இந்நூல் சிறந்ததாகும். எவ்வாறெனின், மற்றைய நிமித்த சுவடி நூல்களில் களவு போனது, செல்வ நிலை, நன்மை தீமைகள் ஆகியவை பற்றிய செய்திகளே குறிக்கப் பட்டிருக்கின்றன. இந்நூலில் மக்களின் உயர் வாழ்க்கைக்கும், சாதாரண வாழ்க்கைக்கும் இலக்காகும் எல்லாவற்றிற்கும் பலாபலன்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன.

இந்நூல், 'சகாதேவ நிமித்த சூடாமணி' என்னும் பெயரால் பிரதி செய்யப்பட்டுள்ளது. நூலில் உள்ள பாடல் ஒன்றின் பகுதியாலும், ஆசிரியர் உரைநடையில் கண்டுள்ள குறிப்பாலும், 'சகாதேவனருளிய நிமித்த சூடாமணி சாத்திரம்' என்னும் முழுமையான பெயரை இந்நூல் பெற்றுள்ளதனை அறிய முடிகின்றது.

பஞ்ச பாண்டவருள் ஐந்தாவது பிள்ளை சகாதேவனாவான். இவன் முற்காலத்திறனை முழுதும் உணர்ந்தறியும் காலக்கணியனாக இருந்துள்ளதைப் பாரதம் நன்கு அறிவிக்கின்றது. இவ்வறிவனின் பெயராலேயே, பிற்காலக் கணிப்பாளரொருவர் தாம் செய்த நூலிற்குப் பெயரிட்டுப் பெருமை சேர்த்துள்ளார். இவ்வாறே மருத்துவ, சோதிட, வாகட, யோக நூல்களும் பெயர் பெற்றிருப்பதை அறிஞர் அறிவர்.

சூடாமணி :

சூடாமணி என்பது செல்வ மகளிர் அணியும் இரத்தினங்கள் பதித்த பொன்னாபரணங்களுள் தலைக்குச் சிறந்ததாகும். இதனை மகளிர் சிரத்தின் உச்சியில் சூட்டிக் கொள்ளும் மகுடம் அல்லது குமிழ்ப் பதக்கம் என்றும் கூறலாகும். மனித உடலின் அழகையும் செல்வ வளத்தையும் எடுத்துக்காட்ட அணியும் அணிகலன்களுள் தலை உச்சிக்கு மேல் சூடுதற்கணியாகும்.

............................................................................................................

இந்த 'நிமித்த சூடாமணி' என்னும் ஆருட பலன் நூல், ஏட்டுச் சுவடியாக என்னிடமிருந்ததாகும். 7.11.85ல், சேலம் அன்பர் ந. அர்த்தநாரீசுவரன் என்பாரின் விருப்பத்திற்கிணங்கி அவருக்கு அளித்துள்ளேன்.

இவ்வணியின்மேல் சூடுதற்கிடனின்மையின் சூடாமணியெனும் ஈடில்லா சிறப்புப் பெயரினை இம்மணியணி பெற்றதென்பர்.

இதைப்போன்றே, நிமித்த நூல்கள் பல மக்களின் வாழ்வியலுள் ஒரு சிலவற்றுக்கே பலன் தருவதாயமைந்திருப்பதைப் போன்று அமையாது, எல்லா வனையான வாழ்வியல் திறங்கட்கும் உயர்வாகப் பலன் கூறும் ஒப்பற்ற ஒரு நூலாக இந்நூல் அமைந்திருப்பதனால் நிமித்த நூல்களுள் உயர்ந்த சூடாமணியாக இந்நூல் அமைந்துள்ளது என்றும் கூறலாகும். மற்றும், மக்களின் வாழ்க்கைச் சூழலில் அமையும் சந்தேக விருப்பங்களாகும். உண்டோ, இல்லையோ ? வருமோ , வராதோ? ஆகுமோ ? ஆகாதோ ? நன்றோ, தீதோ ? என்பன போன்ற வாழ்வியல் ஐயங்களை ஒரு செய்தியாகவும் அறிவிப்புத்தரும் நூலாகவும் இவ்வாருட நூல் அமைந்திருத்தலின் இந்நூல் சூடாமணி போன்றே அமைந்திருப்பது அறியத்தக்கதாகும்.

**நூல் அமைப்பு :**

'சகாதேவ நிமித்த சூடாமணி' என்ற பெயருடன் விளங்கும் இந்நூலின் முற்பகுதி, ஐந்து பாடல்களைக் கொண்டதாகும். பாடல்களில் முதற்பாடல் விநாயகப் பெருமான் காப்புரையாகவும் மற்றைய நான்கு பாடல்களும் நிமித்தம் பார்க்கும் கணக்கு விபரம் தருவதாகவும் அமைந்துள்ளன. நான்காவது பாடலின்கீழ், நிமித்தம் பார்க்கும் கணக்கு முறை உரையாக (வசனம்) எழுதப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

**பலன் பார்த்துச் சொல்லும் முறைமை :**

நிமித்தம் பார்த்துக் கூறும் சோதிடன் நினைத்ததைப் பற்றிய பலனைக் கேட்க வந்திருப்பவரிடம்,

128 எண்களுக்குள், மூன்று தடவை, மூன்று வகை எண்களைச் சொல்லக் கேட்டுக் குறித்துக் கொள்ள வேண்டும்.

பின்னர், அந்த மூன்று வகை எண்களையும் ஒன்றாகக் கூட்டிக்கொண்டு, கூட்டி வந்த எண்ணை ஏட்டில் (ஏட்டு எண்களில்) கழித்து நின்ற மிச்ச எண்களுக்கு ஏடும் வரியும் தள்ளி, ஏடு பார்க்க திருவுளப்பலன் அறிவிப்பாகும்.

இம்முறையே ஆசிரியர் சுவடியில் குறித்துள்ளதாகும். இந்தக் கணக்கின் நெறிமுறைகளை அனுபவத் திறமுடன் அறிந்து, ஏட்டில் பலன் கூறும் வரியினைத் திட்டமாக அறிந்து நிமித்தம் கூற பொருத்தமாக நினைத்தது பற்றிய பலன் துலங்கும்.

**நூலிலுள்ள நிமித்த பலன்கள் :**

1. குடும்பம் : குடியிருப்பு, வீடுகட்ட, மாடி அமைக்க, வாசல்விட
2. பதவிகள் : உத்தியோகம், ஊழியம், பொறுப்புரிமை, சொத்துரிமை

3. வணிகம், வாணிகம் : தனி வணிகம், கூட்டு வாணிபம், வியாபாரம், சந்தைக்கடை, சந்தைக்கூட்டு, சரக்கு மண்டி, பருத்தி, பலசரக்கு வியாபாரம், யானை, குதிரை, பசு, எருமை, ஆடு வாங்கவும் விற்கவும்.

4. கடல் கடந்த வாணிபம் : கடலேறிப்போய் வியாபாரம் செய்ய, கணக்கெழுத, தனி வணிகம் செய்ய

5. பொருள் : பொருள் சேர்க்க, பாதுகாக்க, கடன் கொடுத்து வாங்க, ஒருவரிடம் ஒப்படைக்க, பாகப்பிரிவினை செய்ய

6. வேளாண்மை : வேளாண்மை செய்ய, பயிரிட தென்னை, வாழை, கொடிக்கால், பாக்கு, பலா, கரும்பு, மஞ்சள், இஞ்சி, தாமரை, செங்கழுநீர் பயிரிட, பயிர்பலன் காண

7. நீர்ப்பாசனம் : பருவ கால மழை, வருஷ மழை, மாத மழை, கிணறு வெட்ட, ஏரிகட்ட, வாய்க்கால் வெட்ட, குளம், ஊருணி வெட்ட, ஏற்றம் வைக்க, மதகு வைக்க,

8. கால்நடை : யானை, குதிரை, புனுகுப்பூனை, எருது, பசு, எருமை, ஆடு ஆகிய கால் நடை சீவன்களை வாங்கவும், வளர்க்கவும், விற்கவும், பலன் பெறவும்,

9. நாட்டுநிலை : நாட்டு நடப்பு, நன்மை, தீமை அறிதல், ஆட்சிக்கு வரும் நன்மை தீமை அறிதல், ஆட்சியால் மக்களுக்கு வரும் நன்மை தீமை அறிதல்,

10. குடும்பம் : மனைவி, தீய ஒழுக்கம், புத்திர பாக்கியம் அறிதல், பிள்ளை வளர்ப்பு, பெண்ணுக்குச்சீர், பாகப்பிரிவினை, தலைப் பிள்ளைக்கு உரிமை, சொத்துரிமை வாரிசு, பிணைப்பொறுப்பு, குடும்ப முதல், செல்வப் பாதுகாப்பு,

11. புதையல் : பொருளை புதைத்து வைக்கவும் புதையல் காணவும்.

12. களவு : செல்வம் – களவு, கால்நடை – களவு, பெண் – களவு, போனவை வருமா, வராதா என்பது பற்றிய பலன்.

13. வாழ்வு : சுகபோகம், இரு மனைவி, வைப்பாட்டி, வெள்ளாட்டி, சுகதனக்காரன், பணியாள், அடிமை ஆள்

14. பிரயாணம் : வெளியூர், கடல் கடந்து, அடுத்த தேசம் போவதால் உண்டாகும் நன்மை தீமை : இலாப நட்டம்

15. பஞ்சாயத்து : கிராம பஞ்சாயத்து, நடப்பு பலன் நன்மை – தீமை

16. தானம் தருமம் : பிராமணர்க்கு தானம், அக்கிரகார தானம், தண்ணீர்ப் பந்தல் வைத்தல்

17. கோயில் திருப்பணி : கோயில் கட்டுதல், கோபுரம் அமைத்தல், தெய்வச் சிலைகள் அமைத்தல், தேர் சமைத்தல், கோயில் பண்ட பாத்திரங்கள், தேவதானமாக நிலம் நந்தவனம் வைத்தல்

என்பன போன்றனவும், மக்கள் வாழ்க்கைக்குரிய நன்மை தீமைக்கும் பிறவாறமைந்த சூழ்நிலைகட்கும் நூலில் முறையாகப் பயன் பார்த்தறிந்து

கொள்ளுதற்கு ஒவ்வொரு வரியிலும் பலன்கள் கூறப்பட்டுள்ளன.

எண்களுடைய பகுதியின் தலைப்பில் நிமித்தத்திற்குரிய கேள்வி கேட்கப்பட்டுள்ளது. அதற்குரிய பதில் அதாவது பலன் அந்தப் பகுதியின் முதல் வரியில் சொல்லப் பட்டுள்ளது. அடுத்துள்ள வரிகளில், நிமித்தக் கணக்கு முறைக்குரிய பலன் காணும் வரிகள் உள்ளன.

நூலாசிரியர், காலம் :

நூலாசிரியரின் பெயர் சுவடியில் குறிக்கப் பெறவில்லை. நூலாசிரியர், காலக்கணிக்கிலும், சோதிடக்கலையிலும் வல்லுநராக இருந்திருக்கின்றார் என்பதனை நூலின் அமைப்பு முறையினால் அறிய முடிகின்றது.

நூலின் கண்ணுள்ள ஆருடப் பகுதிகளில் இந்த ராசாவை முடிசூட்ட நன்றோ, தீதோ ? (பகுதி 16) இந்த ராசாவைக் காணப்போக நன்றோ, தீதோ ? (பகுதி 17) என்றமைந்த நிமித்த வினாக்களைக்கொண்டும், கடலேறிப் போய் வாணிகம் செய்யவும், முத்து வணிகம் செய்யவும் யானை, குதிரை வாங்கி விற்கும் வணிகம் செய்யவும் நிமித்த வினாக்கள் கேட்கப்பட்டிருப்பதைக் கொண்டும் கோயில் கட்டவும், கோபுரம் எழுப்பவும், ஏரி கட்டவும் பிராமணர்க்கு அக்கிரகாரம் அமைக்கவும், தேவதானம் செய்யவும் நிமித்த பலன்கள் கூறப்பட்டிருப்பதைக் கொண்டும்,

இந்த சகாதேவ நிமித்த சூடாமணி நூல், தமிழகத்தில் சோழர், பாண்டியர் ஆகிய அரச மரபினரின் ஆட்சி தொடர்ந்து நிகழ்ந்த காலத்தில் நாடுகளில் வழக்கில் இருந்துள்ளது என்பதனை அறிய முடிகின்றது. இக்காலம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டிலிருந்து தொடர்ந்த காலமாகும்.

பெருக நன்று, ஊருணி, மனைவாசல், சீமை ரெட்டிப்பு, சீர்செய்தல், பனுதி பண்ணுதல், பாரிப்பு தவசம், சந்தைச் சரக்கு, முத்து வணிகம், குதிரை வணிகம், கோட்டை போடுதல், தலைக்கட்டுதல், வாரிசு பிள்ளை கொள்ளல், கடல் கடந்து போதல்.

ஆகிய வழக்குச் சொற்களும், சமூக வழக்கங்களும் இந்நூல் பெரும்பான்மை தனவணிகர் வாழும் நகரத்தார் சீமையில் பயன்படுத்தப்பட்டுள்ளதனை அறிமுகம் செய்கின்றன.

மனுநீதிச் சோழனால் தனவணிகர் வம்சத்தாருள் ஒரு பிரிவினர்க்கு, மகுடம் சூட்டுகின்ற உரிமையும், ரத்தினமகுட வைசியர் என்ற பட்டமும் வழங்கப்பட்டுள்ளதனையும்

பூவந்தி சோழன் மகன், ராஜபூஷணனுக்கு தனவைசியருள் அரசருக்கு மகுடம் சூட்டும் உரிமை பெற்ற குடியினர் முடிசூட்டியுள்ளதனையும்,

தனவைசியராகிய நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம் கூறுகின்றது[1]

..........................................................................................

1. 1904 - ஆண்டு பதிப்பு - பக்.6

இவ்வாறான அரசியல் சமுதாய உரிமைகட்குரிய நிமித்தங்கள் இந்நூலில் பல துறைகளில் இடம் பெற்றிருப்பதனால் இந்நூல் கி.பி.14,15ஆம் நூற்றாண்டுகளில் நாட்டில் சிறப்பாக வழங்கப்பட்டுள்ளனைத் திட்டமாக அறிய முடிகின்றது.

பெருவழக்காக நாட்டில் இருந்திருப்பதினால், பல சோதிடர்கள் கையாண்டிருப்பது இயல்பானதாகும். எனவே, பல பிரதிகள் ஏட்டில் செய்யப்பட்டிருக்க வேண்டும். அவற்றுள் ஒன்று,

எதுரக்கோட்டை ராமானுஜ அய்யங்கார் குமாரன் அப்பய்யங்காரிடம் இருந்துள்ளது.

அச்சுவடியினை நேரில் பார்த்துப் பிரதி செய்தவர் அனைக்கூடம் நாட்டாண்மை அ. முத்துக்கருப்ப பிள்ளையாவர்.

இச்செய்தி சரசுவதி மகால் மூலச் சுவடியில் கடைசி ஏட்டில் எழுதப்பட்டுள்ளது. பிரதி செய்யப்பட்ட காலம் 18ஆம் நூற்றாண்டு எனலாம்.

நூற்பயன் : வாழ்க்கையில் வினைப்பயனால் வருவதனையும் சூழ் வினையால் நிகழ்வதனையும் அறிந்து, சிந்தித்துச் செயல்படும் நெறியினைத் திருவுளப்பாங்காக அறிவிப்பதே நிமித்த சாத்திரம். நிமித்த சாத்திரங்களுள் இந்நூல் பழமையானதாக அமைந்திருப்பதாலும், பலன் காணும் கணிப்பு முறை புதிய வழிமுறையினைக் கொண்டதாக இருப்பதினாலும், ஆருடம் கேட்போர்க்குத் திட்டமான செய்தியினை இந்நூல் அளிக்குமென்பது உண்மையும் உறுதியுமாகும்.

**“எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்**
**திண்ணிய ராகப் பெறின்”** – குறள்

நன்றியுரை :

தஞ்சை அரண்மனையின் பெயர் விளங்க, அங்கமாகத் திகழ்ந்து வளர்ந்து வரும், சரசுவதி மகால் செய்து வரும் அரும் பணிகளுள், சுவடிகளாக உள்ள நல்ல நூல்களை அச்சிட்டுப் புத்தகங்களாக நாட்டுக்கு வழங்கும் நற்பணியுமொன்றாகும். தஞ்சை சரசுவதி மகால், அரும்பொருள் காட்சியகம் ஆகிய பெருமதிப்பமைந்த நிறுவனங்களைச் சிறப்புற ஏற்று நடத்தும் தலைமைப் பொறுப்பும், செயலாக்க ஊக்கமும் நிறைந்த மாவட்ட ஆட்சியர்

உயர்திரு து. இரா. இராமசாமி, இ.ஆ.ப., அவர்கள் அன்புடன் சரசுவதி மகால், சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் பதவியினை அளித்து ஆணை செய்ததோடு, 'சதாசிவ ருத்திர தியானம்' என்ற நூலினை எனக்களித்து உரை எழுதச் செய்து அண்மையில் நூல் வடிவாக்கி வெளியிட்டமைக்கும் தொடர்ந்து சகாதேவ நிமித்த சூடாமணி என்னும் பெயரமைந்த இந்நூலினை அளித்து, விளக்கமும், அரும்பொருளுரையும் எழுதச் செய்து பதிப்பிக்கும் உயர் நோக்கிற்கும் எனது உளமார்ந்த நன்றியினை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சரசுவதி மகால், நிர்வாகப் பொறுப்பினைச் சிறப்புடன் நிகழ்த்திவரும் திருவாளர் அ. பஞ்சநாதன், எம்.ஏ.எம்.எல்.ஐ.எஸ்., அவர்கட்கும் எனது அன்பு நிறைந்த நன்றி உரித்தாகும். சிறப்புடன் நூல்களை உருவாக்கும் சரசுவதி மகால் அச்சகத்தாருக்கும் நன்றி. நலம்.

இங்ஙனம்,

மதுரை – 2
17.11.1985.

**சி. கோவிந்தராசனார்,**
சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர்
சரசுவதி மகால் நூலகம்.



உ

ஹரி : ஓம் நன்றாக, குரு வாழ்க

குருவே துணை

# சகாதேவ நூல் என்னும் சகாதேவ நிமித்த சூடாமணி

(ஆரூட சாத்திரம்)

நூல்



விநாயகர் காப்புரை

**ஆபத்தைத் தவிர்த்து ஆளுங் கணேசனை**
**நீபத்தி கொண்டு நெஞ்சில் இருத்தியே**
**மாபத்தி யுடன் மனதில் நினைத்திடுஞ்**
**சோபத்தை அறச் சொல்லுஞ் சூடாமணி**

இப்பாடல் தெய்வ வணக்கமும், நூலின் பயனும் கூறுகின்றது.

விளக்கவுரை: அன்புள்ளத்தாற் சிறந்து, கடவுள் பக்தியில் படிந்துள்ள அடியார்கட்கு ஊழ்வினைப் பயனால் உண்டாகும் தீவினைகளை நீக்கி ஆட்கொண்டருளும் கணேசமூர்த்தியை, ஆரூடம் சொல்லும் நீ மிகுந்த பக்தியுடன் மனத்தில் நிலையாகச் சிந்தித்து இருத்திக்கொண்ட தூய நிலையில்,

உன்னிடம் மிகுந்த நம்பிக்கையுடன் ஆரூடம் கேட்க வந்துநிற்பார் தங்களது நினைத்திடும் கவலைகட்குரிய காரணம் இன்னதென்றும், அதற்கு இன்ன பலன் என்றும் திட்டமாகச் சொல்லுதற்குரிய ஆதாரமாக அமைந்த சாத்திரம், சகாதேவனால் அருளிச் செய்யப் பெற்ற இந்த நிமித்த சூடாமணி என்னும் ஆரூட நூலாகும்.

## நூலின் பயன்

**எண்ணிய கரும மெல்லாம் இயல்புடன் நன்றே யாகும்**
**புண்ணிய மூர்த்தி தந்த போதக முகவன் தன்னை**
**நண்ணி சோமத்தை யேற்றி நாடியே நிமித்தஞ் சொல்லப்**
**பண்ணியல் மொழியாய் கேளாய், பார்த்தனில் உண்மை கண்டாய்.**

விநாயகப் பெருமானை வழிபாடு செய்து, ஆரூடம் சொல்ல உண்மையான பலன்கள் அறிமுகமாகும்.

விளக்கவுரை: சிறந்த மோகனப்பண் போன்ற மேநியை உடைய பெண்ணே, கேட்பாயாக ! உலகில் மக்கள் மனதில் நினைத்த காரியங்கள் யாவும் இயல்பாகவே தெய்வச் செயலால் நன்மையாகவே அமையும்.

சிவபெருமான் அருளிய ஞானத்தின் உருவான யானை முகத்தினையுடைய விநாயகப் பெருமானை அடைக்கலமாக நண்ணி, அப்பெருமானின் நலந்தரும் பெருமைகளையெல்லாம் நிறைவாகப் போற்றி வழிபாடு செய்த பின்னர்.

தன்னிடம் நிமித்தங் கேட்க வந்தவர்கட்கு நிமித்த ஆரூடம் சொல்ல, உண்மையான பலன்களே அறிமுகமாகுமென்பதனைக் கண்டு கொள்வாய்.



## 1. ஆரூடம் கூறுதற்கமைந்த நாளும், முறையும்

அந்தியாஞ் சனிநாள் தன்னி
லானதோர் சுவடி பார்ப்போன்
விந்தையாய்க் காப்புக் கட்டி
வெய்யநாட் காலந் தன்னில்
முந்திய கணப திக்கு
முடிமிசை மலர்கள் சாற்றிச்
சிந்தையில் நினைத்துப் பார்க்கத்
திடமதாய் நினைத்த தெல்லாம்.

விளக்கவுரை : ஞானிகளால் செய்யப்பெற்ற ஒப்பற்ற நிமித்தச்சுவடியினை முறையாகப் பார்த்துப் பலன் சொல்லுகின்ற சோதிடன்

வாரத்தில் முதல் நாளாகும் ஞாயிற்றுக்கிழமை நாளில் சுவடி பார்ப்போனாக இருக்கவேண்டும். சனிக்கிழமை மாலையில் உடல் தூய்மை செய்துகொண்ட அளவில் புதுமையாகக் காப்பு நூல் அணிந்துகொண்டு, மனத்தூய்மையுடன் முந்திய முதல்வனாகிய கணபதிக்கு மலர்களால் அருச்சனை செய்து, கணபதியை மனத்தில் உருவாக்கிக் கொண்ட உறுதியோடு மறுநாள் ஞாயிற்றுக் கிழமை அதிகாலை நிமித்தச் சுவடியினை முறைமையுடன் கணக்கெடுத்துப் பார்த்துச் சொல்ல, ஆரூடம் கேட்பவர் நினைத்த காரியங்கள் அனைத்தினையும் உள்ளது உள்ளவாறே அறியத்தக்கதாக நிமித்த சோதிடம் சொற்பலனாகக் கூறுதற்கு அமையும்.

அந்தியாம் - நாளில் அந்தமாகும் மாலைக்காலம்
விந்திய - புதுமை
முந்திய - தெய்வங்கட்கெல்லாம் முதன்மை பெற்ற
திடமதாகும் - திட்டமான பலன் காண்பதாகும்.
வெய்யநாட்காலம் - சூரியனுக்குரிய நாள், ஞாயிற்றுக்கிழமை



## உ. நிமித்தம் பார்க்க – அளவிட்ட கணக்கு முறை

நூற்றுட னிருபத் தெட்டில்
நுண்மையாம் லெக்கங் கேட்டு
ஏற்றிய மூவர் சொன்ன
இலக்கத்தைத் தொகையொன் றாக்கி
ஆற்றிய ஏட்டுக் கீந்து
அவைதனில் மிச்சந் தன்னை
நாற்றிய லுடனே கேளாய்
நவின்றதோ ரேடு தன்னில்
[சாற்றிய மிச்ச லக்கந்
தனக்கேடு வரியுந் தள்ளே]

குறிப்பு : இப்பாடலில் மூல எட்டில் ஐந்து அடிகள் உள்ளன. நான்காவது அடிக்கு ஈடாக ஐந்தாவது அடியைக் கொள்ளலாகும்.

விளக்கவுரை: நிமித்தங் கூறுபவன், ஆரூடம் கேட்க வந்தவர்களிடத்தில், நூற்று இருபத்தெட்டு எண்களுக்குள் மூன்று முறை மூன்று வெவ்வேறு எண்களைச் சொல்லக் கேட்டு, மூன்று முறையில் அவர் கூறிய எண்களை ஒன்றாகக் கூட்டி, ஏட்டில் தொடக்க முதலாக உள்ள தொடர் எண்ணில் கழித்துக்கொண்டு, மிச்சமான இலக்கத்திற்கு ஏடும் வரியும் தள்ளி நிமித்தம் பார்த்துச் சொல்லவும்.



## 3. ஏடு பார்த்துக்கூறும் முறைமை

**எண்ணிய ஒருவ ரியல்புடன்**
**சொல்கதாகை முதல தாக**
**நண்ணிய ஏட்டுள் எட்டில்**
**நல்கிய வரியை நாடி**
**உன்னிய நிமித்த மாகும்**
**உறுதியாய்க் கருமம் நன்றாம்**
**துன்னிய குழலாய் கேளாய்**
**சூடாமணி நிமித்தம் தானே.**

விளக்கவுரை : நெருங்கிச் செறிந்த கூந்தலை உடைய பெண்ணே, கேட்பாயாக ! நிமித்தம் கேட்க வந்தவர் தன் மனத்தில் திட்டமாக நினைத்து, நூற்று இருபத்தெட்டு எண்களுக்குள் மூன்று முறை கூறிய மூன்று எண்களையும் கூட்டி முதலாக்கிக்கொண்டு, பொருந்திய ஏட்டில் எட்டு எட்டாகத் தொடர்ந்து கூறப்பட்டுள்ள பலன் வரிகளில் எண்ணிக் கழித்தால், அடுத்த வரியே திருவுளப் பலனாகும்.

கவனத்திற்குரிய நினைத்த காரியத்திற்கமைந்த பலனைக் கூறும். அதன்படி நிமித்தம் கேட்டவர் உறுதியாகச் செய்யும் காரியங்கள் நற்பலனாக அமையும்.

உன்னிய - நினைத்த காரியம்
துன்னிய - நெருங்கிச் செறிந்த
சூடாமணி - முடியில் அணியும் நவரத்தின அணிகலன், பதக்கம்.



## ஏட்டில் நிமித்தம் பார்க்கும் முறைமை

(மூல ஏட்டில் உள்ள உரைநடை)

நிமித்த சூடாமணி சகாதேவன் அருளிச்செய்த நூல் இதனைப் பார்க்குமிடத்தில்,

'விநாயகனே நமா' என்று, சனிக்கிழமை நாள் அந்திநேரம் காப்புக்கட்டி, ஞாயிற்றுக்கிழமை நாளுதயத்திலே தானம் பண்ணி,

விநாயகனை எழுந்தருளப் பண்ணிக் கந்தபற்பஞ் சாற்றி, பால், பழம், பச்சரிசி, பொரி, வெல்லம், பாக்கு இலை, தேங்காயுடனே நைவேத்தியஞ் செய்து, சோடச உபசாரம் பண்ணி,

நூற்று இருபத்தெட்டுக்குள்ளே, மூன்று பிரகாரம் லெக்கங்கேட்டு, ஒன்றாய்க்கூட்டி, ஏட்டில் கழித்து, நின்ற சேடத்துக்குத் தக்கது ஏடும் வரியும் தள்ளி, ஏடு பார்க்க நினைத்த காரியம் திருவுளம் பற்றும்,

நாளுதயம் – சூரிய உதய காலம்
தானம் – விரும்பமாகச் செய்யும் தர்மம்
கந்த பற்பம் – கந்தம் – மணம், வாசனை, புற்பம் – பூ; மலர்
சாற்றி – அணிவித்து
பாக்கு – கொட்டைப்பாக்கு; இலை – வெற்றிலை
நைவேத்தியம் – தூய்மையான நிவேதனம்
மூன்று பிரகாரம் – மூன்று தடவை
நின்ற சேடம் – மிகுதியாக நின்ற மிச்ச எண்

ஆரூடம் கேட்க வந்தவரிடம் மூன்று முறைக்கேட்ட எண்களைக்கூட்டி, ஏட்டில் தொடரும் எண்ணில் கழித்து மிச்ச எண்ணிற்கு ஏடும் வரியும் தள்ளி ஏடு பார்க்கும் முறையினை நுட்பத்திறனாலும் அனுபவத்தாலும் அறியலாகும்.



## 4. விநாயகனை எழுந்தருளச் செய்ய நன்றோ ? தீதோ ?

**விநாயகனை எழுந்தருளப் பண்ண நன்று**
**இந்தப் பெண்ணை இவனுக்குக் கொடுக்க நன்று**
**ஆயுதம் கொள்ளக் கேடு வரும்**
**இந்தச் சேவகம் ஆள் நன்றல்ல வேண்டாம்.**

**வேட்டைக்குப் போக மேலே அம்பு படும்**
**ஆடு கொள்ளக் கொள்கையிலே அழிவு வரும்**
**இந்த மருந்தினால் இந்தவியாதி தீர்ந்து கொல்லும்**
**இவனுக்குப் பேர்குடுக்க அனேகங் கூட்டமுண்டாம்.**

இந்தக் கணிப்பு, கடவுள் பக்தி, குடும்பம், ஆயுதம் ஆகியவற்றைப் பற்றிக் குறிப்பதாகும்

விநாயகன் - அடியார்களின் தீவினைகளைப் போக்கும் தலைவன்
எழுந்தருள - திருவுருவை அமைக்க
பண்ண - (பண்ணுதல்) செய்ய
ஆயுதம் - அரிவாள், சுத்தி, வேல் முதலிய ஆயுதங்கள்
சேவகம் - ஏவின வேலை செய்பவன் பணி ஆள் வேலைக்காரன்
வேட்டை - பிராணி, மிருகம் ஆகியவற்றை ஆயுதங்களை ஏவிக் கொல்லுதலும், பிடித்தலும்.
கொள்ள - விலைக்குப் பெற
கொள்கையிலே - அடாவடிக் கொள்ளை களவிலே நோயிலே
அழிவு - அழிந்துபோகும்
தீர்ந்து கொல்லும் - குணமாகியதைப்போல் கொல்லும்
பேர் கொடுக்க - பிணைப் பெயர் கொடுக்க (சாமீன்)
அனேகம் - அனேகம் பேர்
கூட்டம் - சேர்க்கை, நட்பு உண்டாகும்.



## 5. கோவில் கட்ட நன்றோ, தீதோ ?

**கோவில் கட்ட நன்று, கைகூடும்**
**விநாயக னெழுந்தழுளப் பண்ண நன்று**
**இந்தப் பெண்ணை இவனுக்குக் கொடுக்க வாழாது**
**ஆயுதங் கொள்ள அனேக நன்று.**

**இந்தச் சேவுகம் ஆள் பலிப்புண்டு, நன்றாகாது**
**வேட்டைக்குப் போக வேட்டை தடுமாற்றம் தரும்**
**ஆடு கொள்ள அனேகம் பலிப்புண்டு ; நன்று**
**இந்த மருந்தினால் இந்த வியாதி பொறுக்கும், நன்று**

இதனால், கடவுள் வழிபாடு, சேவகம், வாழ்க்கை ஆகியவற்றைப் பலப்படுத்தலாகின்றது

கைகூடும் – தகுதிகள் அமையும்
பண்ண – செய்ய உருவாக்க
வாழாது – கூடி இருந்து குடும்பம் நடத்தாது
ஆயுதம் – வாள், வில், வேல், அரிவாள் முதலியன
சேவுகம் – சொன்னபடி செய்தல்
பலிப்புண்டு – வெற்றியுண்டு, நினைத்தபடி நடக்கும்
நன்றாகாது – நிறைவாகக் கிடைக்காது
தடுமாற்றம் – இங்கோ, அங்கோ, இதுவோ, அதுவோ என்று மயக்கம்
அனேகம் பலிப்பு – பலவகைப் பலன்
பொறுக்கும் – தனியும், குறையும்
வியாதி – சரீரத்தால் வந்தது. மனம் நோக வருத்துவது
மருந்து – வியாதி தீர மருத்துவனால் கொடுக்கப்பட்ட மருந்து



## 6. கோபுரம், சிகரம் கட்ட நன்றோ, தீதோ ?

**கோபுரம் சிகரம் கட்ட சீக்கிரம் முடியும்**
**கோவில் கட்ட மிகவும் நன்று**
**விநாயகனை எழுந்தருளப் பண்ண விக்கின மில்லை**
**இந்தப் பெண்ணை இவனுக்குக் கொடுக்க நன்று**

**ஆயுதம் கொள்ளச் செயம் பண்ணும், நன்று**
**சேவுகம் ஆள் தனக்குச் சேதம் வரும்**
**வேட்டைக்குப் போக வேட்டை அகப்படாது**
**ஆடு கொள்ளத் தனம் தானியம் சம்பத்துண்டு எதிரில்லை**

இந்த வாசகம், திருப்பணி ஆயுத முயற்சி ஆகியவற்றைக் கூறுகின்றது

கோபுரம் - கோயில்களில் தலைவாயிலின்மேல் எழுப்பப் பெறும் மாட அடுக்கு
சிகரம் - கோயில் விமானத்தின் உச்சித் தலைப்பு
சீக்கிரம் - விரைவாக, குறுகிய காலத்தில்
விக்கினம் - குறைவு, தாழ்வு, குற்றம்
செயம் - ஜெயம், வெற்றி
பண்ணும் - உண்டு பண்ணும்
சேவுகம் - சொன்னதைச் செய்தல்
ஆள் - சேவகம் பார்க்கும் ஆள்; செய்யும் ஆள்
சேதம் - அழிவு, சிதைவு, குறைவு
அகப்படாது - கைக்குக் கிடைக்காது
கொள்ள - பெற்றுக்கொள்ள, விலைக்குக் கொள்ள
தனம் - செல்வம், தானியம் - நெல், வரகு முதலியன
சம்பத்து - பல வகையான நற்செல்வம்



**7. சிவலிங்கம் பிரதிஷ்டை பண்ண நன்றோ, தீதோ ?**

**சிவலிங்கம் பிரதிஷ்டை பண்ண நன்று**
**இந்தக் கோபுரம் தர்மத்தினாலே முழயும்**
**கோயில் கட்ட மத்திமம்**
**விநாயகனை எழுந்தருளப் பண்ண மத்திமம்**

**இந்தப் பெண்ணை இவனுக்குக் கொடுக்கக் கேடு வியாதி வரும்**
**ஆயுதம் கொள்ளப் பிராண சேதம் வரும்**
**இந்தச் சேவகம் ஆள் சமர்க்களத்திலே மடிவான்**
**வேட்டைக்குப் போக வேட்டை அதிகமாக அகப்படும்**

இதனால் தெய்வம், திருமணம், ஊழியம், முயற்சி
ஆகியவை குறிக்கப்படுகின்றன.

சிவலிங்கம் - சைவ சமயத்தார்கள் நிறுவிப் பூசிக்கும் சிவனின் அருவுருவத் திருமேனி, வெளிப்படையான உரு
தர்மம் - பயன் பார்க்காமல் செய்யும் பொருளுதவி
கெடு - கெடுதல் நோய் உண்டாகும்
பிராணசேதம் - உயிருக்கு ஆபத்து
சமர்க்களம் - போர்க்களம், சண்டை போடும் இடம்
மடிவான் - இறந்து போவான்
அதிகமாக - மிகுதியாக, நினைத்தற்கு மேலாக



## 8. தேர் சமைக்க நன்றோ, தீதோ ?

**தேர் சமைக்க நன்று**
**சிவலிங்கம் பிரதிஷ்டை பண்ண நன்று**
**கோபுரம் சீக்கிரம் முடிவடையும்**
**இந்தக் கோயில்கட்டப் பூசை நடக்காது**

**விநாயக னெழுந்தருளப் பண்ண விக்கினந் தீரும்**
**இந்தப் பெண்ணை இவனுக்குக் கொடுக்கச் சுகமே யிருப்பான்**
**ஆயுதங் கொள்ளச் சுக்கிரவாளைக் கொண்டிருப்பான்**
**இந்தச் சேவகங் கொள்ளச் சமர்க்களத்தைவிட்டு**
**ஓடிப்போவான்**

பலன் சொல்லும் வாசகம், திருப்பணி, முயற்சி, செயல்
ஆகியவற்றைப் பற்றியதாகும்

சமைக்க - உருவாக்க
சீக்கிரம் - விரைவாக, சமீப காலம்
பூசை - நாள்தோறும் நடக்கும் பூஜை, வழிபாடு
விக்கினம் - குற்றம் குறைகள்
சுகமேயிருப்பான் - எல்லா நலங்களையும் பெற்று வாழ்வான்
சமர்க்களம் - போர்க்களம்
ஓடிப்போவான் - தோல்வி அடைந்து ஓடிப்போவான்
பிரதிஷ்டை - தெய்வத் திருவுருவைப் பீடத்தில் அமைத்தல்
சுக்கிரவாள் - வாளாயுதத்தில் ஒரு வகை
சேவகம் - பாதுகாப்பு
வினாயகனை எழுந்தருளப் பண்ண - விநாயகர் திருவுருவை அமைத்து வழிபாடு செய்ய



## 9. பரிகலஞ் சேர்க்க நன்றோ, தீதோ ?

**பரிகலஞ் சேர்க்க நீளியாது குறைவு**
**தேர்சமைக்க நன்று, காரியம் பலிக்கும்**
**சிவலிங்கம் பிரதிட்டை பண்ண வேண்டாம்**
**இந்தக் கோபுரங் கடுகி முடுகி நடக்கும்.**

**கோவில் கட்டச் சாக குற்றப் படுவான்**
**விநாயக னெழுந்தருளப் பண்ண நன்று**
**இந்தப் பெண்ணை இவனுக்குக் கொடுக்கக் கூடாது**
**ஆயுதங் கொள்ளச் சண்டை மாறாது.**

இதனால் திருப்பணி, குடும்பம், முயற்சி ஆகியவை கவனமாகின்றன

பரிகலம் - குடும்ப வாழ்க்கைக் குரிய பண்ட பாத்திரங்கள்
நீளியாது - பெருகாது, விருத்தியாகாது
காரியம் - தோடங்கிய காரியங்கள்
கடுகி முடுகி - விரைவாக வேலை தொடர்ந்து வேகமாக நடக்கும்
சாக குற்றம் - வருத்தம் தரும் குற்றம்
பண்ண - செய்ய, அமைக்க
சண்டை மாறாது - உண்டான சண்டை மாறாமல் தொடரும்.



**10. சீதனஞ் சேர்க்க நன்றோ, தீதோ ?**

**சீதனஞ் சேர்க்கப் பரிபாலன மாகும்**
**பரிகலஞ் சேர்க்க நடக்கும்**
**தேர் சமைக்க மிகுதியும் நன்று**
**சிவலிங்கம் பிரதிட்டை பண்ண நன்று.**

**இந்தக் கோபுரம் திரவியக் குறையினாலே தாமதமாயிருக்கும்**
**கோயில் கட்ட நன்றாய் நடக்கும்**
**விநாயக னெழுந்தருளப் பண்ண நன்று**
**இந்தப்பெண்ணை இவனுக்குக் கொடுக்கச் சம்பத்துண்டாம்.**

இந்த வாசகம், பொருள், திருப்பணி, குடும்பம் பற்றியதாகும்

சீதனம் - சீர்வரிசைப்பொருள், பொன் இரத்தினம் ஆகிய மதிப்புடைய பொருள்.
பரிபாலனம் - தேவைக்கேற்ற பண்டபாத்திரங்கள்
மிகுதியும் - அதிகமாக, நினைப்பதற்கு மேல்
திரவியம் - பொருள், பணம், கோபுரம் கட்டச் செலவிடும் பொருள்
நன்றாய் நடக்கும் - நன்றாக விளங்கும்
சம்பத்து - பலவகைச் செல்வம்



## 11. அகரம் வைக்க நன்றோ, தீதோ ?

**அகரம் வைக்க நன்று**
**சீதனஞ் சேர்க்க நீளியாது மத்திமம்**
**பரிகலஞ் சேர்க்க நீளியாது மத்திமம்**
**தேர் சமைக்கப் பலனுண்டாம்.**

**சிவலிங்கம் பிரதிஷ்டை பண்ண விக்கினம் வரும்**
**இந்தக் கோபுரத்துக்கு லக்கனம் பழுதாம்**
**கோவில் கட்டப் பூசை நடக்கும்**
**விநாயக னெழுந்தருளப் பண்ண அனேக நன்று.**

இதனால் தர்மம், பொருள் சேர்க்கை, திருப்பணி
குறிக்கப்படுகின்றது

அகரம் - வேத பிராமணர்கட்கு விடும் நிலமும் தர்மமாகக் கொடுத்து வாழவைக்கும் ஊர்ப்பகுதி
சீதனம் - சீர்வரிசை
நீளியாது - பெருகாது, நிலைக்காது
மத்திமம் - பெருகாமல் குறையாமல் இருக்கும்
சமைக்க - உருவாக்க, உண்டுபண்ண
விக்கினம் - குறைவு
லக்கனம் - சாத்திரப்படியான அமைப்பு
பழுதாம் - பழுதாகும், குறைவுபடும்
அநேக நன்று - பல நன்மைகள் வரும்



## 12. திருவாசல் தண்ணீர்ப் பந்தல் வைக்க நன்றோ, தீதோ ?

**திருவாசல் தண்ணீர்ப் பந்தல் வைக்க நன்று**
**அகரம் வைக்க நன்மை யாகும்**
**சீதனஞ் சேர்க்க வெகுலாபம் நன்மையாகும்**
**பரிகலஞ் சேர்க்க நன்றாய் நீளிக்கும்**

**தேர் சமைக்கச் சிலநாள் நடக்கும் மத்திபம்**
**சிவலிங்கம் பரதிஷ்டை பண்ணிவைக்க நன்று**
**இந்தக் கோபுரம் நன்றாய் முசியும்**
**இந்தக் கோயில் கட்ட நன்மை உண்டு.**

இந்த வாசகத்தால், தர்மம், திருப்பணி, தன்முயற்சி அறியப்பெறுகின்றது

திருவாசல் – கோயில் வாசல்
அகரம் – வேதப் பிராமணர் குடியிருப்பு இடம்
வெகுலாபம் – அதிக லாபம்
நன்றாய் – நல்ல முறையில்
சில நாள் நடக்கும் – சில காலம் – ஓடும்
நன்றாய் முசியும் – நல்ல அமைப்பில் நிறைவு பெறும்

ஜ௦௵

## 13. இந்தக் கிராமம் தேவதானமிட நன்றோ, தீதோ ?

**இந்தக் கிராமம் தெய்வ தானமிட நடவாது**
**திருவாசல் தண்ணீர்ப் பந்தல் வைக்க நன்று**
**அகரம் வைக்க அழிந்து போகும்**
**சீதனஞ் சேர்க்க மிகுதியாய்ப் பலிக்கும்**

**பரிகலஞ் சேர்க்க அதிகமாகி நடக்கும் நன்று**
**தேர்சமைக்க நன்றாய்த் தேர் நடக்கும்**
**சிவலிங்கம் பிரதிஷ்டை பண்ண நன்றல்ல**
**இந்தக் கோபுர முகிந்து முகவசீ கரமுண்டு.**

இதனால் தெய்வ நேர்த்தி, தர்மம் ஆகியவை குறிக்கப்படுகின்றன

கிராமம் - சிற்றூர்
தெய்வதானம் - தெய்வத்தின் பேரால் செய்யும் தர்மம்
திருவாசல் - கோயிலின் வாசல்
மிகுதியாய் - அளவில் பெரியதாய்
பலிக்கும் - நினைத்த பலனாகும்
பரிகலம் - பண்ட பாத்திரப் பொருள்கள்
முகிந்து - நிறைவாகி
முகவசீகரம் - தோற்றக் கவர்ச்சி



## 14. இந்தக் கிராமம் அக்கிரகாரம் பண்ணி வைக்க நன்றோ ? தீதோ ?

**இந்தக்கிராமம் அக்கிரகாரம் பண்ணிவைக்க விக்கினமுண்டு**
**இந்தக் கிராமம் தேவதானம் விட நன்று**
**திருவாசல் தண்ணீர்ப் பந்தல் வைக்க நன்று**
**அகரம் வைக்கத் தீர்க்க முண்டாகும்.**

**சீதனஞ் சேர்க்கப் பலிபோகமுண்டு கலவினால் சேதம்**
**பரிகலஞ் சேர்க்க அதிகம் பலப்பல விதத்திற்கு நன்று**
**தேர் சமைக்க இந்தஊர் நன்றாய்ப் பலிப்புண்டு**
**சிவலிங்கம் பிரதிஷ்டை பண்ண அநேக நன்மை.**

இதனால், பிராமணதர்மம், திருப்பணி அறிமுகமாகின்றன.

கிராமம் அக்கிராகாரம் பண்ணி வைக்க - கிராமத்தில் பிராமணர் குடியிருப்பினைச் செய்து வைக்க

தீர்க்கம் - நல்ல பலன், நிறைவு
பலிபோகம் - உணவு அனுபோகம்
பரிகலம் - பண்ட பாத்திரங்கள்
பலிப்புண்டு - ஊரிற்கு நன்மை உண்டு



## 15. நந்தவனம் வைக்க நன்றோ, தீதோ ?

**நந்தவனம் வைக்க சேம நன்று**
**இந்தக் கிராமம் அக்கிரகாரம் பண்ணிவைக்க நன்று**
**இந்தக் கிராமம் தேவதானம்விட பிரபலமாகும்**
**திருவாசல் தண்ணீர்ப் பந்தல் வைக்க நன்று**

**அகரம் வைக்க அனேக பலனுண்டு**
**சீதனஞ் சேர்க்க வெகுலாப முண்டு**
**பரிகலஞ் சேர்க்கப் பரிபாலின மாகாது**
**தேர் சமைக்க உடையவர் திருவுளப் பலனுண்டு**

இந்த வாசகத்தால், சிவ தர்மம், தானதர்மம், உபயம் அறியப்பெறுகின்றன.

சேம நன்று - பாதுகாப்பான நன்மை
சேம - மிகவும்
தேவதானம் - தெய்வங்கட்டுகுச் செய்யும் நிலபுல தர்மம்
பரிபாலனம் - பாதுகாப்பு
உடையவர் - தேருக்க உரிய தெய்வம்
திருவுளப் பலன் - தெய்வ அனுக்கிரகம்



**16. இந்த ராசாவை முடிசூட்ட நன்றோ, தீதோ ?**

**இந்த ராசாவை முடிசூட்ட நன்று**
**நந்தவனம் வைத்துப் பயிர் செய்ய நன்று**
**இந்தக் கிராமம் அக்கிரகாரம் பண்ணிவைக்க விக்கினம் வரும்**
**இந்தக் கிராமம் தேவதானம் விட்டால் நடக்கவொட்டார்**

**திருவாசல் தண்ணீர்ப் பந்தல் வைக்க அதிகமாகும்**
**அகரம் வைக்கத் தானிய சம்பத்துண்டாம்**
**சீதனஞ் சேர்க்க மிகுதியும் பலிக்கும் நன்று**
**பரிகலஞ் சேர்க்கப் பரிபாலனமாம் நன்று.**

இவற்றால் அரசியல், தர்மம், செல்வம்,
முயற்சி கூறப்படுகின்றன

முடிசூட்ட - முடிசூட்டிவைக்க, பதவியிலமர்த்த
விக்கினம் - தீங்கு துன்பம்
நடக்கவொட்டார் - செய்யவிடமாட்டார்கள் (மக்கள்)
அதிகமாகும் - தரமம் வளரும், பலன் மிகுதியாகும்
பலிக்கும் - எண்ணியபடி நடக்கும்
பரிபாலனமாம் - அனுபவிப்பதற்கு ஆகும்.



## 17. இந்த ராசாவைத் காணப்போக நன்றோ, தீதோ ?

**இந்த ராசாவைக் காணப் போக நன்று**
**இந்த ராசாவை மூடிசூட்ட நன்மையில்லை**
**நந்தவனம் வைக்கப் பயிராகாது**
**அக்கிரகாரம் பண்ணிவைக்க வின்னம் வந்து நன்மையாம்**

**இந்தக் கிராமம் தேவதானம்விடத் தவிர்ந்து பின்பு நன்றாம்**
**திருவாசல் தண்ணீர்ப்பந்தல் வைக்க நன்று**
**அகரம் வைக்க நன்று**
**சீதனஞ் சேர்க்க வியாதிவந்து சிறிது சேதமாகும்.**

பலன் வாசகம், அரசியல் தொடர்பு, தர்மங்கள், வாழ்க்கை
ஆகியவற்றை அறிவிக்கின்றன

காணப்போக - தன் காரியமாக காணப்போக
பயிராகாது - பூச்செடிகள் விருத்தியாகா
அகரம் - வேத பிராமணர் குடியிருப்பிடம்
சிறிது சேதம் - சிறிது நட்டம்
ராசாவை - அரசனை (அதிகாரியை)
வின்னம் - குறைபாடு

◘◘◘

**18. இந்த ராசாவின் பக்கல் போனால்**
**கோபிப்பானோ, கோபியானோ ?**

**இந்த ராசாவின் பக்கல்போக நன்றாய் மன்னிப்பான்**
**இந்த ராசாவைக் காணப்போக நன்று**
**இந்த ராசாவை முடிசூட்ட நன்று**
**நந்தவனம் பயிர் செய்ய நன்று.**

**இந்தக் கிராமம் அக்கிரகாரம் பண்ணிவைக்க விட்டவன்**
**பேரில் சுமக்கும்**
**இந்தக் கிராமம் தேவதானம் விட்டால் தீர்க்க முண்டாம்**
**திருவாசல் தண்ணீர்ப் பந்தல் வைக்க நீளியாது**
**அகரம் வைக்க அனேக நன்று.**

அமைந்த பலன், அரசு, தர்மம் ஆகியவற்றைக்
குறிக்கின்றது

ராசாவின் பக்கம் - அரசனிடம், அதிகாரியிடம்
பேரில் சுமக்கும் - செய்தவன் பேரில் நிற்கும்
தீர்க்கம் உண்டாம் - நிறைவான நன்மை உண்டாம்
நீளியாது - நீடிக்காது
அநேக நன்று - அனேக நன்மைகள் உண்டாகும்

அரசனுக்கு முடி சூட்டும் உரிமை அக்காலம். இக்காலத்தில் அரசியல் பதவியில் அமர்த்துதல் ஒப்பாகும்.



## 19. இந்தக் கிரகம் எடுக்க நன்றோ, தீதோ?

**இந்தக் கிரகம் எடுக்க நன்று**
**இந்த ராசாவின் பக்கல் போனால் அனேகமாக வீற்றிருப்பான்**
**இந்த ராசாவைக் காணப்போதல் நன்று**
**இந்த ராசாவை முடிசூட்டச் சகாயம்**

**நந்தவனம் வைத்துப் பயிர்செய்யப் பாழாய் விடும்**
**இந்தக் கிராமம் அக்கிரகாரம் பண்ணிவைக்கப் பிராமணரே நடத்திக்கொள்வார்**
**இந்தக் கிராமம் தேவதானம் விட்டால் விக்கினம் பின்பு நன்று**
**திருவாசல் தண்ணீர்ப் பந்தல் வைக்கச் சிறிதுநாள் நடக்கும்.**

பலன், வீடு, அரசாங்கம், தர்மம் ஆகியவற்றைக் குறித்ததாகும்

கிரகம் - வசிக்கும் வீடு
எடுக்க - கட்டிக் குடிபோக
பக்கல் - அவனிடம்
வீற்றிருப்பான் - காணக்கிடைப்பான்
சகாயம் - ஆதரவான உதவி
தேவதானம் - கோயில்களுக்குச் செய்யும் தர்மம்



## 20. கிணறு வெட்ட நன்றோ, தீதோ ?

**கிணறுவெட்டக் கங்கை குதிகொள்ளும் வாத்து நன்று**
**இந்தக் கிரகம் எடுக்க நன்மையாம்**
**இந்த ராசாவின் பக்கம் போனால் கோபிப்பான்**
**இந்த ராசாவைக் காணப்போக நன்று**

**இந்த ராசாவை முடிசூட்டிவைக்க நன்று**
**நந்தவனம் வைத்துப் பயிரிடப் புட்பம் நன்றாய் எடுக்கும்**
**அக்கிரகாரம் பண்ணிவைக்க விக்கினம் வந்து தீரும்**
**இந்தக் கிராமம் தேவதானம் விட்டால் நன்மையாம்.**

இதனால், நீர்நிலை, கோயில் தர்மம், குறிக்கப்பெறுகின்றன

கங்கை குதி கொள்ளும் - நீர் ஊற்றுப் பெருகி வரும்
கிரகம் எடுக்க - வீடு கட்ட
நன்றாய் எடுக்கும் - நன்றாக வளர்ந்து பூக்கும்
விக்கினம் வந்து தீரும் - துன்பம் வந்து தீர்ந்து போகும்
தேவதானம் - கோயில்களுக்குச் செய்யும் தர்மம்

ஐ௨ஓ

## 21. ஏற்றம் வைக்க நன்றோ, தீதோ ?

**ஏற்றம் வைக்க நன்றாய்ப் பலிக்கும்**
**இந்தக் கிணறுவெட்ட இரண்டேற்றம் வைக்கலாம்**
**இந்தக் கிரகம் எடுக்க நன்மையாம்**
**இந்த ராசாவின் பக்கல் போனால் கனல்போலே கோபிப்பான்**

**இந்த ராசாவைக் காணப்போக லாபமுண்டு**
**இந்த ராசாவை முழுகூட்ட ராச்சியம் பாழாம்**
**இந்த நந்தவனம் வைக்க அனேக நன்று**
**இந்தக் கிராமம் அக்கிரகாறம் பண்ணிவைக்க நன்றாய்ப் பலிக்கும்.**

இதனால் விவசாயம், வீடு, அரசு, தர்மம் போசப்படுகின்றன.

ஏற்றம் - நிலங்களுக்கு நீர்பாய்ச்சும் நிலை ஏற்றம்
இரண்டு ஏத்தம் - இரண்டு ஏற்றம்
கிரகம் - வீடு, வாழும் மனை
கனல்போல - நெருப்பைப்போன்று
அனேக நன்று - பலவகை நன்மை
நன்றாய்ப் பலிக்கும் - நிறைவாக விளங்கும்



## 22. ஏரி கட்டினால் தண்ணீர் நிற்குமோ, நில்லாதோ ?

**ஏரி கட்டினால் தண்ணீர் நிற்கும்; நன்று**
**ஏற்றம் வைக்கப் பலகால முதவியுண்டு**
**இந்தக் கிணறு வெகு ஆழத்தில் தோண்டில் தண்ணீர் காணும்**
**இந்தக் கிரகம் எடுக்கக் குடிகேடு வரும்**

**இந்த ராசாவின் பக்கல்போகப் பெருக நன்று**
**இந்த ராசாவைக் காணப்போக மத்திபம்**
**இந்த ராசாவை முடிசூட்ட இவனுக்கு யெதிரில்லை**
**நந் தவனம் வைத்துப் பயிர்செய்ய மேன்மேலும் நன்மையாம்**

இந்த வாசகத்தால் நீர் நிலைகள், அரசியல் ஆகியவை அறிமுகமாகின்றன

குடிகேடுவரும் - குடிக்குக் கெடுதி வரும்
பெருக நன்று - மிகவும் நன்று
மத்திமம் - சாதாரண பலன்
எதிரில்லை - இவனைப் போன்றவர் இல்லை
தோண்டல் - ஆழமாக அகழ்ந்தால்
காணும் - நீர் தோன்றும்
கிரகம் - மனை, வீடு
பக்கல் போக - அருகில் செல்ல



## 23. இந்த மதகினால் நீரேறுமோ, யேராதோ ?

**இந்த மதகினால் ஊழிக்காலம் நீர் பாயும்**
**ஏர் கட்டினால் உடையாமல் நீர் நிற்கும்**
**ஏற்றம் வைக்கத் தண்ணீர் வராது**
**இந்தக் கிணறுவெட்ட எந்தக்காலமும் தண்ணீர் வடியாது**

**இந்தக் கிரகம் எடுக்க அனேகம் நன்மையுண்டாம்**
**இந்த ராசாவின் பக்கல் போனால் அவன்**
**பொல்லாதவனாக இருப்பான்**
**இந்த ராசாவைக் காணப்போகக் கோபிப்பான்**
**இந்த ராசாவை முடிசூட்ட அவனைச் சேர்ந்தபேர் வாழ்வார்.**

கூறிய வாசகம், பாசன நீர், மனை, முயற்சி
ஆகியவற்றைக் குறிக்கும்

ஊழிக்காலம் - எக்காலமும், கடைசி வரையில்
வடியாது - தண்ணீர் குறையாது
கிரகம் - வீடு, வாழும் மனை

குறிப்பு : அரசர்கள் ஆட்சி செய்த காலத்தில் இந்த ஆரூட நூல் செய்யப் பெற்றுள்ளதால், இக்காலத்திற்கு ஏற்றதாகப் பலனை மாற்றி உரைத்தல் வேண்டும்.



## 24. இந்தக் குளம் ஊருணி வெட்ட நன்றோ, தீதோ ?

**இந்தக் குளம் ஊருணி வெட்ட நீர் நில்லாது**
**இந்த மதகினால் நீர்பாய்ந்து நன்றாய் விளையும்**
**ஏரி கட்டினால் நீர் நிற்கும்; நன்று**
**இந்த ஏற்றம் வைக்க நன்றாய்ப் பலிக்கும்**

**இந்தக் கிணறு வெட்டக் கோடைக்குத் தண்ணீரில்லை**
**இந்தக் கிரகம் எடுக்க தனதானிய சம்பத்துண்டாம்**
**இந்த ராசாவின் பக்கல் போக பெருக நன்மை பண்ணுவார்**
**இந்த ராசாவைக் காணப்போக நன்மையாம்.**

இதனால் விவசாயம், நீர்ப்பாசனம், அரசியல்
குறிக்கப்பெறுகின்றன

குளம் ஊருணி – குளமாக வெட்டப்பட்ட ஊரார் பருகும் நல்ல
நீர் அமைந்த தடம்.
கோடைக்கு – கோடை காலத்திற்கு
தன தானிய சம்பத்து – செல்வம், நெல், உளுந்து முதலிய தானியம்
ஆகிய போகப் பொருள்கள்
பெருக – மிகுதியாக
பக்கல் – அரசனிடம், அதிகாரியிடம்
பண்ணுவார் – செய்வார்

## 25. வாய்க்கால் வெட்ட நன்றோ, தீதோ ?

**வாய்க்கால் வெட்ட மிகவும் நன்று**
**இந்தக் குளம் ஊருணிவெட்ட நன்றாய் விளங்கும்**
**இந்த மதகினால் நன்றாய் விளையும்; நீர் வற்றாது**
**இந்த ஏரி கட்டினால் உடைந்து அடைபடும்**

**இந்த ஏற்றம் வைக்கில் குடியோடிப் போவான்**
**இந்தக் கிணறு வெட்டினால் நீருண்டு; தளமிடியும்**
**இந்தக் கிரகம் எடுக்க நெடுநாள் நிற்கும்**
**இந்த ராசாவின் பக்கல்போக மிகவும் நன்மை செய்வான்**

இதனால் பயிர்த்தொழில், பாசனம் குறிக்கப்பெறுகின்றன

ஊருணி - ஊரார் பருகும் நீர் நிலை, குளம்
குடியோடிப்போவான் - செய்தவன் ஊரை விட்டு ஓடிப் போவான்
தளம் - பக்கத்தளம்
நெடுநாள் - நீண்ட நாள்



## 26. இந்த மாதத்திற்க மழை உண்டோ, இல்லையே ?

**இந்த மாதத்திற்கு மழைபெய்யும் ! பயமில்லை**
**இந்த வாய்க்கால் வெட்ட நன்று**
**இந்தக் குளம் ஊருணிவெட்ட நிறைய நீர் நிற்கும்**
**இந்த மதகினால் தண்ணீர் பாயாது; மேடாம் விளைவில்லை**

**ஏரி கட்டினால் பலனில்லை, மத்திபம்**
**ஏற்றம் வைக்க ஏற்றம் முசியும்; பொல்லாங்கில்லை**
**இந்தக் கிணறு வெட்டினால் ஊழிக்காலமும் விளங்கும்**
**இந்தக் கிரகம் எடுக்க அனேகம் பேருண்டாம்**

இதனால் பருவகால மழை, பாசனம் குறிக்கப்படுகின்றன.

முசியும் - முறியும்
பொல்லாங்கில்லை - குற்றம் இல்லை
ஊழிக்காலம் - எக்காலமும், கிணறு உள்ளவரையில்
அனேகம் பேர் - பலவகையான புகழ், விருத்தி.
பேர் - நூற்பெயர்

குறிப்பு: விவசாயத்திற்குரிய நீர்ப்பாசனம் பற்றிய ஆரூடமாக இருப்பதால், பொருத்தமாகப் பொருள் அறிந்து கூறவேண்டும்.



## 27. இந்த வருஷத்துக்கு மழையுண்டோ, இல்லையோ ?

**இந்த வருஷத்துக்கு மழை உண்டு**
**இந்த மாஷ்த்தைக்கு மழை ரெட்டிப்பாய்ப் பேயும்**
**வாய்க்கால் வெட்டினால் ஏரி உடைக்கும்**
**இந்தக் குளம் ஊருணிவெட்ட நன்றாய் வாய்க்கும்**

**இந்த மதகினால் பலன் மத்திமம்**
**ஏரி கட்டினால் நன்றாக விளையும்; நன்மை வரும்**
**இந்த ஏற்றம் வைக்கப் பயிரழியும் பலிப்பில்லை**
**இந்தக் கிணறு வெட்டத் தண்ணீரில்லை.**

இந்த வாசகம், மழை, நீர்ப்பாசனம் பற்றியதாகும்.

மாஷ்த்தை - மாதத்திற்கு
ரெட்டிப்பு - இரண்டு மடங்கு
பேயும் - பெய்யும்
வாய்க்கும் - அமையும்
பலிப்பில்லை - பலனில்லை

குறிப்பு : இப்பகுதியில் சுவடியில் உள்ளபடி மக்கள் வழக்கமாகப் பேசும் சொற்கள் காட்டப்பட்டுள்ளன.



## 28. இந்த வருஷ மிந்தச் சீமை விளையுமோ விளையாதோ ?

**இந்த வருஷ மிந்தச் சீமை நன்றாய் விளையும்**
**இந்த வருஷத்துக்குச் சுளிமழையாமிருக்கும்**
**இந்த மாஷ்த்தைக்கு மழைபெருகயில்லை ; அற்பம்**
**இந்த வாய்க்கால் வெட்டத் திடலாய்ப் போகும்**

**இந்தக்குளம் ஊருணிவெட்ட நீர் வத்திப் பாழாம்**
**இந்த மதகினால் நீர்பாயும், படிந்துபோம்**
**ஏரி கட்டினால் பெருக விளையாது**
**இந்த ஏற்றம் வைக்க ராசாக்களாலே குடிகேடு வரும்**

இதனால் பருவகால போகம், பலாபலன்
ஆகியவை குறிக்கப்படுகின்றன

சீமை - நாடு
களிமழை - அங்கும் இங்குமாகப் பெய்யும் மழை
மாஷத்தை - மாதத்தில்
பெருக்க இல்லை - அதிகம் இல்லை
அற்பம் - மிகவும் குறைவு
திடல் - தரைமட்டம்
வத்திப்போம் - வற்றிப்போகும்
வடிந்துபோம் - படிமானமாகப் பாயும்
பெருக - அதிகமாக



## 29. ஏர் வைக்க நன்றோ, தீதோ ?

**ஏர் வைக்க வெகுலாபம்; நன்று**
**இந்த வருசமிந்தச் சீமை விளையும்**
**இந்த வருசத்துக்கு முன்மழையில்லை ; பின்மழை உண்டு**
**இந்த மாஷ்த்தைக்கு மளை கனக்கயில்லை நின்று பேயும்.**

**வாய்க்கால் வெட்ட நீரு உருண்டோழப் பாயும்**
**குளம் ஊரணி வெட்டப் பாழாயிப் போம்**
**இந்த மதகினால் நீர் பாயாது ; தீவில்லாமல் விளையும்**
**ஏரி கட்டினால் நீர் மிகவும் பெருகி நன்றாய் விளையும்**

இந்த வாசகம் மழை, விவசாயம், பாசனம்
ஆகியவற்றைப் பற்றியதாகும்

ஏரி வைகக - ஏர் கொண்டு உழ
சீமை - நாடு
கனக்க - மிகுதியாக
பேயும் - பெய்யும்
உருண்டோடி - வேகமாக ஓடிச்சென்று



**30. இந்த வெள்ளாமை செய்ய நன்றோ, தீதோ ?**

**இந்த வெள்ளாமை செய்ய நன்று**
**ஏர்வைக்க நன்று ; அந்தவருசந் தவரும்**
**இந்த வருசமிந்தச் சீமை பாதி விளைச்சல்**
**இந்த வருசத்துக்க மழை மிக வுண்டு**

**இந்த மாஷ்த்தைக்கு மழை கனக்க உண்டு ; பயமில்லை நன்று**
**இந்த வாய்க்கால் வெட்ட நன்றாய் நீர் பாயும்**
**இந்தக் குளம் ஊரணி வெட்டக் கீளாறு மண்டிப்போம்**
**இந்த மதகினால் அனேகம் பிழைப்புண்டாம்.**

இதனால் பயிர்த்தொழில், நீர்ப்பாசனம் அறியப்பெறுகின்றன.

வெள்ளாமை - பயிர்த்தொழில், விவசாயம்
தவரும் - (துவறும்) தவறிப்போகும். பலன் இல்லாமல் போகும்
கனக்க - மிகுதியாக
கீளாறு - (கீழாறு) புல்பூண்டுகள், புதர்
பிழைப்பு - அனேக விளைச்சல்

## 31. கூட்டு வெள்ளாமையிட நன்றோ, தீதோ ?

**கூட்டு வெள்ளாமையிட நன்று, பயமில்லை**
**இந்த வெள்ளாமை செய்ய லாபமில்லை**
**ஏர் வைக்கப்ப சண்டையாம் ; நன்று**
**இந்தச் சீமை அதிகமாய் விளையும்.**

**இந்த வருசத்துக்கு மழை அதிகமாய்ப் பெய்யும் நன்றாய் விளையும்**
**இந்த மாத்தைக்கு மழை ரெட்டிக்கப் பெய்யும் ;**
**முதல் வெள்ளாமை நன்று**
**வாய்க்கால் வெட்ட அனேகம் பலனுண்டு**
**இந்தக் குளம் ஊரணி வெட்ட நன்றாய்ப் பொங்கப்படும்.**

இதனால் பயிர்த்தொழில், மழை, நீர்ப்பாசனம் குறிக்கப்பெறுகின்றன

வெள்ளாமை - பயிர்த்தொழில்
வைக்கப்ப - ஏர் வைத்து உழும்போது
மாத்தைக்கு - மாதத்திற்கு
ரெட்டிக்க - இரண்டு மடங்காக
முதல் வெள்ளாமை - முதல் போகப் பயிர்
பொங்கப்படும் - நீர் சுரந்து நிற்கும்



## 32. அகரம் ஏறுமோ, குறையுமோ ?

**அகம் ஏறும் பயமில்லை**
**கூட வெள்ளாமை யிடப் பலியாது**
**இந்த வெள்ளாமையிட லாபமுண்டு**
**ஏர் வைக்க லாப மில்லை**

**இந்த வருச மிந்தச்சீமை மிகுபோகமாய் விளையும்**
**இந்த வருசத்துக்கு மழையுண்டு தெளிவாயிருக்கும்**
**இந்த மாதத்திற்கு மழை சிலவிடத்துக்கு உண்டு ;**
**சில இடத்துக்கு இல்லை**
**வாய்க்கால் வெட்ட நீரோடாது.**

இந்த வாசகத்தால் காரியபலம், மழைப்பயன் பேசப்படுகின்றது

அகம் - குடும்பம், கட்டும் வீடு : கொண்ட பொருள்
கூட - அளவுக்கு மேலாக
பலியாது - பலன் தராது
மிகு போகம் - மிகுதியான விளைச்சல்
தெளிவாக இருக்கும் - குறையில்லாமல் இருக்கும்

## 33. இந்தப் பயிரிடல் நன்றோ, தீதோ ?

**இந்தப் பயிரிட நன்றாய்ப் பலிக்கும்**
**அகம் மெத்த யேறும். பயமில்லை**
**கூட்டு வெள்ளாமை யிட நன்று**
**இந்த வெள்ளாமை செய்ய லாப முண்டு.**

**ஏர் வைக்க நன்று பராமரித்துப் பார்க்க வேணும்**
**இந்த வருச மிந்தச் சீமை நன்றாய் விளையும்**
**இந்த வருசத்துக்கு முன்மழையுண்டு ; பின் மழை இல்லை**
**இந்த மாதத்திற்கு மழை சடுதியிலே பெய்யாது.**

இதனால் விவசாயம் பற்றிய பலன்கள் கூறப்படுகின்றன

பலிக்கும் – பலன் தரும்
மெத்த ஏறும் – மிகவும் உயர்வடையும்
பராமரித்து – நேர் பார்வையால் பாதுகாத்து
சடுதியில் – முன்னதாக விரைவாக
முன் மழை – கோடை மழை
பின் மழை – பருவகால மழை

ஸ்ரீ

## 34. தென்னம் பிள்ளை வைக்க நன்றோ தீதோ ?

**தென்னம்பிள்ளை வைக்கப் பலிப்பில்லை**
**இந்தப் பயிரிட நன்றாய்ப் பலிக்கும்**
**அகங்குறையும் ; தானியம் கொண்டு வைய்க்கவும்**
**கூட்டு வெள்ளாமை யிடப் பலிக்கும்.**

**இந்த வெள்ளாமை செய்ய நன்றல்ல ; வேண்டாம்**
**ஏர் வைக்க வெள்ளாமை பலிக்கும்**
**இந்த வருச மிந்தச்சீமை அரைவிளைச்சல் விளையும்**
**இந்த வருசம் இவடத்துக்குப் பின்மழை உண்டு.**

இதனால் விவசாய வருமானம், பலமுறைகளில்
அறியப்பெறுகின்றது

தென்னம் பிள்ளை - தோட்டங்களில் புதிதாக நடப்பெறும் இளம் தென்னம் கன்றுகள்
பலிப்பில்லை - பலனில்லை
அகம் குறையும் - வீட்டு வளமை குறையும். மதிப்பு குறையும்.
தானியம் - நெல், கம்பு, உளுந்து முதலிய தானியங்கள்
கூட்டு வெள்ளாமை - மற்றொருவரோடு சேர்ந்து செய்யும் பயிர்த்தொழில்
ஏர் வைக்க - நல்ல நாளில் பொன்னேர் கட்டி உழ
வருசம் - ஆண்டு, வருடம்
அரை விளைச்சல் - பயிர் அறுவடைப்பலன் அரையாகும்
இவடத்துக்கு - இந்த இடத்திற்கு. ஊர் நிலங்களுக்கு



**35. வாழைவைக்க நன்றோ, தீதோ ?**

**வாழை வைக்க நன்றாய்ப் பலிக்கும்**
**தென்னம் பிள்ளை வைக்க நன்று**
**இந்தப் பயிரிடப் பலனுண்டு ; நன்று**
**அகம் ஏறாது குறையாது சமனாய் நிற்கும்**

**கூட்டு வெள்ளாமையிடப் பலிக்கும், சண்டை வரும்**
**இந்த வெள்ளாமையிட லாபமுண்டு ; நன்று**
**ஏர் வைக்க வியாதியுண்டு ; அறபிறசாடி வினை**
**இந்த வருசம் மிந்தச் சீமை நன்றாய் விளையும்.**

இந்த வாசகம், பயிர்த்தொழில் பற்றிய
பலன்களை அறிவிக்கின்றது

நன்றாய் பலிக்கும் - நல்ல பலன் உண்டாகும்
அகம் - குடும்ப வளம் செல்வ வருவாய் பொருள் மதிப்பு
சமன் - இலாப நட்டமின்றிய நிலை
அற பிறசாடி வினை - தர்ம காரியங்களில் தீங்கு செய்ததால் வந்த வினை.

கூட்டு வெள்ளாமையிடுவதால் பலனுண்டு. ஆனால் கூட்டாளியோடு சண்டை வரும்.

## 36. கொடிக்கால் வைக்க நன்றோ, தீதோ ?

**கொழுக்கால் வைக்க நன்றா யிருக்கும்**
**வாழை வைக்க லாப முண்டு**
**தென்னம் பிள்ளை வைக்க நன்றாய்ப் பலிக்கும்**
**இந்தப் பயிரிட அதிக லாபம்.**

**அகம் குறையாது, நாளுக்குநாள் ஏறிவரும். நன்று**
**கூட்டு வெள்ளாமையிட, ஒத்துவராது.**
**இந்த வெள்ளாமை செய்ய நன்றாய் விளையும்**
**ஏர் வைக்கச் சாழ உண்டாயிருக்கும்.**

இதனால் தொடர்ந்த வருமானம், விவசாயம்
அறியப்பெறுகின்றது.

கொடிக்கால் - வெற்றிலைக்கொடி விளையும் தோட்டம்
தென்னம்பிள்ளை வைக்க - தோட்டத்தில் தென்னம்பிள்ளை நட
ஏறிவரும் - செல்வம், வளமை மிகுந்து வரும்
ஒத்து வராது - நினைத்தபடி பொருத்தமாக இருக்காது
ஏர் வைக்கச் சாடி உண்டாயிருக்கும் - புது ஏர் கட்டி உழும் போது
மண்சாடிகள் பூமியில் தோன்றும்
சாடி - மண்ணால் செய்த பெரும் பானை.

௳௵

## 37. கமுகு வைக்க நன்றோ. தீதோ ?

**கமுகு வைக்க நன்று. பலிதம்**
**கொழுக்கால் வைக்க நன்று**
**வாழை வைக்க நன்றாய்ப் பலிக்கும்**
**தென்னம் பிள்ளை வைக்கத் தலைப்பாரிப்போகும்.**

**இந்த பயிரிட நன்றாய்ப் பலிக்கும் ; கலாபத்தாலழியும்**
**அகம் குறையும். மெத்தத் தவசங் கொள்ளவும்**
**கூட்டு வெள்ளாமையிட வெகு லாப மூண்டு**
**இந்த வெள்ளாமையிடச் சந்தோச மில்லை.**

இந்த வாக்கினால் வெள்ளாமை, பலம் அறிமுகம்

கமுகு - பாக்கு மரம்
தலைப் பாரிபோகும் - தென்னம்பிள்ளையின் தலைப்புக் குருத்து பரவி நிற்கும்
கலாபத்தாலழியும் - ஒன்றோடு ஒன்று கலத்தலால் அழியும்
மெத்த - மிகவும் (செட்டி நாட்டு வழக்கு)
தவசம் - தானியம்
வெகுலாபம் - மிகுதியான லாபம்
சந்தோசம் - (சந்தோஷம்) மகிழ்ச்சி, மனநிறைவு

ஐயே

**38. பலாமரம் வைக்க நன்றோ, தீதோ ?**

**பலாமரம் தோப்பு வைக்க நன்று**
**கமுகு வைக்க விக்கின முண்டாகும்**
**கொடிக்கால் வைக்கப் பலிக்கும்**
**வாழை வைக்க வியாதியா லழியும்.**

**தென்னம்பிள்ளை வைக்க நன்றாயுதவிப்படும்**
**இந்தப் பயிரிட வெள்ளத்தா லழியும்**
**அகம் ஏறும். விலை குறையாது**
**கூட்டு வெள்ளாமையிடச் சிறிது சாவியாய்ப்போகும்.**

இதனால் நீண்ட கால வருமானம் பேசப்படுகின்றது.

தோப்பு - ஒரே சாதி மரங்கள் பல வளர்ந்திருப்பது தோப்பாகும்
கமுகு - பாக்கு மரம்
விக்கினம் - குறைபாடு, சிதைவு
கொடிக்கால் - வெற்றிலைக் கொடிக்கால்
வியாதி - வாழைக்கு வரும் கணக்கல் நோய்
நன்றாய் உதவிப்படும் - நல்ல வருவாய் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும்
வெள்ளம் - அதிக மழையால் வரும் வெள்ளம்
அகம் - கொண்ட பொருள் மதிப்பு
சாவி - வாடல் நோய், பதர் முதலிய நோய்களால் வளர்ச்சி குன்றுதல்

ஃஃஃ

## 39. கரும்பு வைக்க நன்றோ, தீதோ ?

**கரும்பு வைக்கச் சேதமுண்டு**
**பலாமரம் வைக்க நன்று**
**கமுகு வைக்கப் பலன் குறையும்**
**கொடிக்கால் வைக்க நன்று. பயிராகும்.**

**வாழை வைக்கச் சகல சம்பத்துண்டாகும்**
**தென்னம்பிள்ளை வைக்கத் தோட்டம் விலைப்படும்**
**இந்தப் பயிரிட மிகுதியும் பலிப்புண்டு**
**அகம் குறையாது; எப்படியுஞ் சமனாயிருக்கும்.**

இந்த வாசகம் விவசாயம், தொழில் பற்றியதாகும்.

சேதம் உண்டு - பயிர்ச்சேதம் ஏற்படும்
கமுகு - பாக்கு மரம்
சகல சம்பத்து - எல்ல வகையான செல்வம்
தோட்டம் விலைப்படும் - தோட்டம் விற்பனையாகும்
அகம் குறையாது - வாங்கின மதிப்பு குறையாது
எப்படியும் சமனாயிருக்கும் - எவ்வாறாயினும் கொள்முதல் லாபம் குறைவின்றி இருக்கும்
இந்தப் பயிரிட - ஆரூடம் கேட்பவர் நினைத்த பயிரிட

**40. மஞ்சள் இஞ்சி பலகிழங்கு வைக்க நன்றோ, தீதோ ?**

**மஞ்சள் இஞ்சி பலகிழங்கு வைக்க நன்று**
**கரும்பு வைக்க அதிக லாபமுண்டு**
**பலாமரம் தோப்புவைக்கப் பின்பலனுண்டு**
**கரும்பு வைக்க மிகவும் நன்று.**

**கொடிக்கால் வைக்கப் பலிப்பில்லை ; முறியும்**
**வாழை வைக்க குடிகெடும். நன்றல்ல ; வேண்டாம்**
**தென்னம்பிள்ளை வைக்கச் சம்பத்துண்டு. குலையும்**
**இந்தப் பயிரிட நன்றாய்ப் பலிப்புண்டு.**

இதனால் பயிர்த்தொழில், பலாபலன் குறிக்கப்படுகின்றது.

பலிப்பில்லை - பலனில்லை
முறியும் - பாதியில் அழிவு உண்டாகும்
குடிகெடும் - வைத்தவன் குடும்பம் கெடும்
குலையும் - சிதைவுபடும், செலவழியும்
இந்தப் பயிரிட - ஆரூடம் கேட்பவர் நினைத்த பயிரை விளைவிக்க



**41. செங்கழுநீர், தாமரை போட நன்றோ, தீதோ ?**

**செங்கழுநீர் தாமரை போட நன்று**
**மஞ்சள் இஞ்சி பலகிழங்கு பயிரிட நன்று**
**கரும்பு வைக்க வியாதியுண்டு. பலிப்பில்லை**
**பலாமரந் தோப்பு வைக்க நன்று.**

**கமுகு வைக்க வியாதியுண்டாகிப் பின்பு பலிக்கும்**
**கொடிக்கால் கொடிக்காலிட்டவன் சாவான்**
**வாழை வைக்க, ஆசை பிரியமுண்டாம்**
**தென்னம் பிள்ளை வைக்கப் புத்திர சம்பத்துண்டாம்.**

இதனால் பலவகை தாவர பலன்கள் அறிமுகமாகின்றன.

செங்கழுநீர் - மணமுள்ள சிவப்பு அல்லிக்கொடி
(நீர்ப்பூண்டு வகையில் ஒன்று)
போட - நீர் நிலைகளில் நட்டு வைக்க
வியாதி உண்டாகி - பயிர்க்கு நோய் உண்டாகி
கமுகு - பாக்கு மரம்
கொடிக்கால் - வெற்றிலைத்தோட்டம்
ஆசை - பற்றுதல், விருப்பம்
புத்திர சம்பத்து - புத்திர பாக்கியம்
ஆசை பிரியமுண்டாம் - மேலும் தொடர்ந்து பயிரிடும்
பற்றாசை உண்டாகும்



**42. சந்தை வைக்க நன்றோ, தீதோ ?**

**சந்தை வைத்தால் நன்றாய் ஏறும்**
**செங்கழுநீர் தாமரை போட நன்று**
**மஞ்சள் இஞ்சி பலகிழங்கு பயிரிட மத்திபம்**
**கரும்பு வைத்தால் மிகுதியும் நன்று**

**பலாமரந்தோப்பு வைக்க பிரயோசனப்படமாட்டான்**
**கழுகு வைக்கப் பலிப்பம் கொள்ளமாட்டான்**
**கொழுக்கால் வைக்க நன்று. தாபத்தாலழியும்**
**வாழை வைக்கப் பிராண சேதம் வரும்.**

இதனால் வியாபார நோக்கம், வகை, பலன் கூறப்படுகின்றன.

சந்தை - அங்காடி வியாபாரம்
ஏறும் - வியாபாரம் உயர்வடையும்
போட - குளத்தில் நட்டுப் பயிரிட
மத்திபம் - குறைவில்லாத பலன்
பிரயோசனம் - பயன்படுதல்
பலிப்பம் - பலாபலன்
தாபத்தாலழியும் - சில மனத்தாபத்தால், பிறர் பகையால் அழிவு ஏற்படும்
பிராணன் - உயிர்

ஐஐ

## 43. இந்த வியாபாரம் பண்ண நன்றோ, தீதோ ?

**இந்த வியாபாரம் பண்ண நன்று**
**சந்தை வைக்கப் பலிப்புண்டு. நன்று.**
**செங்கழுநீர் தாமரை போட நன்று**
**மஞ்சள் இஞ்சி பலகிழங்கு பயிரிட நன்று.**

**கரும்பு வைக்க நன்றாய்ப் பயிராகும். நன்று.**
**பலாமரந்தோப்பு வைக்கப் பின்பு பலனாகும்**
**கமுகு வைக்க வெகுலாப முண்டாகும்**
**கொழிக்கால் வைக்க மிகவும் உதவியுண்டாம்.**

இதனால் வியாபார முயற்சி, செயல், பலன் அறிமுகமாகின்றன.

வியாபாரம் - கடை வியாபாரம்
சந்தை - அங்காடிக்கடை
செங்கழுநீர் - மணமுள்ள செவ்வல்லிப்பூ
கமுகு - பாக்குமரம்
வெகுலாபம் - மிகுதியான லாபம்
நன்றாய்ப் பயிராகும் - நல்ல வளமுள்ள பயிராக வளரும்
மிகவும் உதவி - வருமான உதவி



## 44. சந்தைக்குப் போகின்ற காரியம் நன்றோ, தீதோ ?

**சந்தைக்குப் போற காரியம் நன்று**
**இந்த வியாபாரம் அதிக லாபமுண்டு**
**சந்தை வைக்கச் சந்தையேறாது ; பாழாம்**
**செங்கழுநீர் தாமரை போட நன்று**

**மஞ்சள் இஞ்சி பலகிழங்கு பயிரிடப் பலிப்பில்லை**
**கரும்பு வைக்கப் பயிராகும், பலிப்பில்லை**
**பலாமரந் தோப்புவைக்க ஆலிசம், பின்பு நன்றாம்**
**கமுகு வைக்கப் பின்பு நன்மை யுண்டாம்**

இதனால் பொருள் கொள்ளும் நிலை, பயிரிடும் முறை ஆகியவை குறிக்கப்படுகின்றன.

சந்தைக்குப் போகின்ற காரியம் - வியாபாரம் சம்பந்தமாகப் போகின்ற காரியம்
சந்தை ஏறாது - அங்காடி வியாபாரம் பெருகாது அகவிலை ஏறாது.
பலிப்பில்லை - பலன் ஏறாது
ஆலிசம் - பருவ விளைவு கடந்து போதல், காற்றால் அழிவு படல்
கமுகு - பாக்கு மரம்

## 45. கூட்டு வாணிபம் செய்ய நன்றோ, தீதோ ?

**கூட்டு வாணிபஞ் செய்ய நன்று**
**சந்தைக்குப் போறகாரியம் நன்று**
**இந்த வியாபாரம் எப்படியும் நன்றல்ல**
**சந்தை வைக்க வளமா யேறும்.**

**செங்கழுநீர் தாமரைபோட யிடைவற்றிப் போம் ;**
**பின் அடி நன்று**
**மஞ்சள் இஞ்சி பலகிழங்கு பயிரிட மிகவும் நன்று**
**கரும்பு வைக்க நன்றாய்ப் பலிக்கும்**
**பலாமரந்தோப்பு வைக்க மிகவும் நன்று.**

இந்த வாசகத்தால் வியாபாரம், விவசாயம் அறிவிப்பாகின்றது.

கூட்டு வாணிபம் - பல வணிகர் முதலீடு செய்து நிகழ்த்தும் பெரு வியாபாரம்
எப்படியும் - எந்த உபாயத்தாலும்
போற காரியம் - போகின்ற காரியம்
வளமாய் ஏறும் - நாளுக்க நாள் மிகுதியாக வளரும்
இடைவற்றிப்போம் - கொடி தண்ணீரில்லாமல் வாடிப்போகும்
அடி - அடிக்கிழங்கு



**46. இந்தக் கிடைச்சரக்கு ஊதியமாகுமோ, ஆகாதோ ?**

**இந்தக் கிடைச்சரக்கு ரெட்டிக்க ஊதியமுண்டு**
**கூட்டு வாணிபஞ் செய்யப் பலனுண்டு**
**சந்தைக்குப் போற காரியம் நன்மையில்லை**
**இந்த வியாபாரம் எப்படியும் ரெட்டிக்க லாபமுண்டு**

**சந்தை வைக்க நன்று ; பலிப்புண்டாம், சந்தை ஏறும்**
**செங்கழுநீர், தாமரை போட நன்று**
**மஞ்சள் இஞ்சி பலகிழங்கு பயிரிட நன்று**
**கரும்பு வைக்க மிகவும் நன்று.**

இதனால் பொருள், வியாபார பலன், பயிர்களின் பலன்
ஆகியவை அறியப்பெறுகின்றன

கிடைச்சரக்கு – தேங்கி இருக்கும் வியாபாரப் பொருள்
ரெட்டிக்க – இரண்டு மடங்காக
ஊதியம் – வருவாய், லாபம்
கூட்டு வாணிபம் – பல வியாபாரிகள் கூடிச் செய்யும் வியாபாரம்
சந்தை ஏறும் – சந்தை வியாபாரம் பெருகும்
கரும்பு வைக்க – கரும்புப் பயிர் வைக்க

ஃஃஃ

## 47. பருத்திக் கிடைச்சரக்குக்கொள்ள நன்றோ, தீதோ ?

**பருத்திக் கிடைச்சரக்குக் கொள்ள லாபமுண்டு**
**இந்தக் கிடைச்சரக்கு ஊதியம் போகாது**
**கூட்டு வாணிபஞ் செய்ய ஒத்துநிற்கும். லாபமில்லை**
**சந்தைக்குப் போற காரியம் சடுதியல் லாபம்.**

**இந்த வியாபாரம் லாபமுண்டு. தனிச்சுக்கொடுத்தால் வராது**
**சந்தை வைக்க, வைத்தவன் சாவான். நன்றல்ல**
**செங்கழுநீர், தாமரை போடப் பிரபலமாம்**
**மஞ்சள் இஞ்சி பலகிழங்கு பயிரிட நன்று.**

இவற்றால் வியாபாரம், பயிர் வகைகள்
கூறப்பெறுகின்றன

கிடைச்சரக்கு - சேர்த்து, தேக்கி வைத்து விற்கும் சரக்கு
ஊதியம் - வருமானம்
போகாது - விற்பனை போகாது
வாணிபம் - பெரிய முதலீட்டில் செய்யும் வியாபாரம்
ஒத்து நிற்கும் - சரியாக அமையும்
போற காரியம் - போகின்ற காரியம்
சடுதியில் - வெகு விரைவில்
தனிச்சு - தனியாக, நான் மட்டும்
பிரபலமாம் - நல்ல விளம்பரம் ஆகும்.



## 48. தன சுகக்காரன் பக்கல் போக நன்றோ, தீதோ ?

**தனசுகக்காரன் பக்கல் போனால் நன்றல்ல**
**பருத்தி கிடைச்சரக்குக் கொள்ள லாபிக்கும்**
**இந்தக் கிடைச்சரக்கு எப்போதும் நன்றாய்ப் பிறக்கும்**
**கூட்டு வாணிபஞ் செய்யப் பாடு வரும்.**

**சந்தைக்குப் போன காரியம் அசட்டையாகப் போகும்**
**இந்த வியாபாரம் மெத்த லாபமில்லை**
**சந்தை வைக்க, வைத்தவனுக்கு வியாதி வரும்**
**செங்கழுநீர், தாமரை போட நன்று.**

இதனால் பண உதவி, வியாபாரம் குறிக்கப்பெறுகின்றன

தனசுகக்காரன் - செல்வத்தால் சுக சீவனம் செய்பவன்
லாபிக்கும் - லாபமாகும்
நன்றாய்ப் பிறக்கும் - நல்ல முறையில் விற்பனையாகும்
பாடு வரும் - முயற்சி தேவைப்படும் (வரும்)
அசட்டை - பயனற்ற செயல்
மொத்த லாபம் - அதிக லாபம்
போட - குளத்தில் பயிர் உண்டாக்க



## 49. கடலேறிப் போக நன்றோ, தீதோ ?

**கடலேறிப்போக மிகவும் நன்று. பலிப்புண்டு**
**தனசுகக்காரன் பக்கல் போனால் தனுசுபாதி கொடுப்பான்**
**பருத்திக் கிடைச்சரக்குக் கொள்ள வெகு ஊதியம்**
**இந்தக் கிடைச்சரக்குக்கொள்ள மலியுங் கொள்ள**
**வேண்டாம்**

**கூட்டு வாணிபஞ் செய்ய ஊதியம் போதாது**
**சந்தைக்குப் போறகாரியஞ் சரக்கு முதலாகும்**
**இந்த வியாபாரம் செயம் வராது. செய்ய வேண்டாம்**
**சந்தை வைக்க வைத்தவனுக்குச் சம்பத்துண்டாம்.**

இந்த ஆரூடம், திரவிய முயற்சி,
வியாபார நிலை அறிவிக்கின்றது.

கடலேறிப் போக - கடலில் கப்பலேறி அக்கரைச் சீமைக்குப் போக
பலிப்புண்டு - போன காரியத்தில் நற்பலன் உண்டு
தனசுகக்காரன் - பண முதலீட்டாளன்
தனுசு பாதி - வருமானத்தில் பகுதி (பாதி)
வெகு ஊதியம் - மிகுதியான வருமானம்
மலியும் - விலை குறைந்து விடும்
சரக்கு முதலாகும் - சரக்குகள் வாங்கியது முதலாகி நிற்கும்
செயம் - வியாபாரத் தேர்ச்சி

## 50. கடலேறிப் போனவன் வருவானா வாரானோ ?

**கடலேறிப் போனவன் சடுதியிலே வருவான்**
**கடலேறிப்போக அதிக லாபமுண்டு**
**தனசுயக்காரன் பக்கல் போனால் சண்டை வரும்**
**பருத்திக் கிடைச்சரக்குக் கொள்ளக் கேடு வரும்**

**இந்தக் கிடைச்சரக்கு முதலாகின்றது ; பாக்கியம்**
**கூட்டு வாணிபஞ் செய்ய சண்டை வற்றாது**
**சந்தைக்குப் போறகாரியம் மெத்தப் பலிக்கும். நன்று**
**இந்த வியாபாரம் முதல் காணாது.**

இதனால் கடல் கடந்தவன் நிலை,
வாணிப வகை அறியப்பெறுகின்றன.

சடுதியில் - விரைவில்
பக்கல் போனால் - அவனிடம் சென்றால்
கிடைச்சரக்கு - தேக்கமாகும் சரக்கு
கேடு வரும் - கெடுதி வரும்
முதலாகின்றது - விற்பனையாகின்றது. நல்ல காலம்
சண்டை வற்றாது - சண்டை நிற்காது
முதல் காணாது - போட்ட முதல் போதாது



## 51. கடன் கொடுத்து வாங்க நன்றோ, தீதோ ?

**கடன் கொடுத்து வாங்க நன்று**
**கடலேறிப் போனவன் வருவான்**
**கடலேறிப்போக நன்றல்ல ; உதவியில்லை**
**தனசுகக்காரன் பக்கல் போனால் லாபந் தருவான்**

**பருத்திக் கிடைச்சரக்குக் கொள்ள அசலடிவருமுத லாபம்**
**பருத்திக் கிடைச்சரக்கு அதிக லாபமுண்டு, நன்று**
**கூட்டு வாணிபஞ் செய்ய ஆதியம் மிகுதியாம். நன்று**
**சந்தைக்குப் போறகாரியம் அசலடி வரும்.**

இதனால் கடன் பெறல், திரவியம் தேடல், வியாபாரம் ஆகியவை கூறப்படுகின்றன.

கடலேறிப் போனவன் - கடல் கடந்து போனவன்
லாபந்தருவான் - லாபத்தில் பங்க தருவான்
அசலடி வருமுதல் - பலவாறான விற்பனைகளால் தனி முதலாகும்
அசலடி - பலவாறான சச்சரவு



## 52. இந்த ஊரிலே குடியிருக்க நன்றோ, தீதோ ?

**இந்த ஊரிலே குழயிருக்க நன்று**
**கடன் கொடுத்து வாங்கச் சண்டை வரும்**
**கடலேறிப் போனவன் பலிப்புண்டாய் வருவான்**
**கடலேறிப் போக வியாதி கொள்வான்**

**தனசுகக்காரன் பக்கல் போனால் சடுதியிலே வருவான்**
**பருத்திக் கிடைச் சரக்குக் கொள்ள மிரட்டி காணும்**
**இந்தக் கிடைச்சரக்குக் கொள்ள ஊதியம் போதும்**
**கொள்ளை போகும்**
**கூட்டு வாணிபஞ் செய்ய எப்பழயும் லாபமுண்டாம்.**

இதனால், வாழ்க்கை பற்றிய பலன்கள் கூறப்பட்டுள்ளன.

பலிப்புண்டாய் - போனகாரியம் பலிதமாகி
சடுதியிலே - விரைவிலே
இரட்டி காணும் - இரு மடங்க ஆகும்
கொள்ளை - வழிப்பறி கொள்ளை
கூட்டு வாணிபம் - பலர் கூடிச் செய்யும் பெரிய வியாபாரம்



**53. இந்த ஊரிலே குடியிருக்க நன்றோ, தீதோ ?**

**இந்த ஊரிலே கோட்டை போட நன்று**
**இந்த ஊரிலே குடியிருக்க நன்று**
**கடன் கொடுத்து வாங்க நன்று**
**கடலேறிப் போனவன் கடுக வருவான்**

**கடலேறிப் போகக் காரிய மாகாது**
**தனசுகக்காரன் பக்கல் போனால் கடன் மறிப்பாயிருக்கும்**
**பருத்திக் கிடைச்சரக்குக் கொள்ளக் கொள்ளை போம்**
**இந்தக் கிடைச்சரக்கு முதல் காணாது சேதம் வரும்.**

இதனால் திரவியம் தேடல், காரியமாதல்
குறிக்கப்படுகின்றன.

கோட்டை போட - நிலையாகத் தங்கி இருக்க
கடுக வருவான் - வெகு வேகமாகத் திரும்பி வருவான்
காரியம் ஆகாது - போன காரியம் செயமாகாது
கடன் மறிப்பு - கடனால் தடை உண்டாகும்
முதல் காணாது - முதல் தேராது
சேதம் - வீண் அழிவு



## 54. இந்த ஊர் கூடுகின்ற காரியம் நன்றோ தீதோ ?

**இந்த ஊர் கூடுகின்ற காரியம் மெத்த நன்மை**
**இந்த ஊரிலே கோட்டை போட நன்று**
**இந்த ஊரிலே குடியிருக்க நன்றல்ல. வேண்டாம்**
**கடன் கொடுத்து வாங்க காரியம் இல்லை.**

**கடலேறிப்போனவர் நாள் செல்லும் பலிப்புண்டு**
**கடலேறிப் போகக் காரியமாகாது மத்திபம்**
**தனசுகக்காரன் பக்கல் போனால் சண்டை வரும்**
**போகவேண்டாம்**
**பருத்திக் கிடைச்சரக்குக் கொண்டால் கேடு வரும்**
**வேண்டாம்.**

இதனால் ஊர் பொதுநிலை ஆதரவு அறியப்படுகின்றன

ஊர் கூடுகிற காரியம் - ஊர் கூட்டம் கூடுகின்ற காரியம்
கோட்டை போட - நிலைத்து வைக்க
காரியம் இல்லை - பயனில்லை
நாள் செல்லும் - திரும்பிவர நாள் செல்லும்
மத்திபம் - சாதாரண பலன்
கேடு வரும் - குற்றம் வரும். ஏமாற்றம் வரும்.

⧈⧈⧈

**55. இந்த மணியக்காரன் போன காரியம் நன்றோ, தீதோ ?**

**இந்த மணியக்காரன் போன காரியம் நன்று**
**இந்த ஊர் கூடுகின்ற காரியம் மெத்த நன்று**
**இந்த ஊரில் கோட்டை போட நன்று**
**இந்த ஊரிலே குடியிருக்க மத்திபம்**

**கடன் கொடுத்து வாங்கச் சண்டையுண்டாம்**
**கடலேறிப்போனவன் வியாதிப்பட்டு நோயாய் வருவான்**
**கடலேறிப் போற காரியம், உயிரழிவு வரும்**
**தனசுகக்காரன் பக்கல் போனால் ஒன்று பாதியாய்த் தீர்த்துக் கொடுப்பான்.**

இந்த வாசகம் செயல்களின் பலன்கள் கூறுகின்றது

மணியக்காரன் - ஊர்க்கணக்கன், கிராமக்கணக்கன்
கோட்டை - நிலையான செயல் அமைக்க
நோயால் வருவான் - நோயாளியாகத் திரும்பி வருவான்
போற - போகின்ற
பக்கல் - அவனிடம்
ஒன்று பாதி - ஒன்றில் பாதி, லாபத்தில் பாதி

ஃஃஃ

## 56. இந்த மணியத்தால் லாபமுண்டோ இல்லையோ ?

**இந்த மணியத்தால் லாபம் உண்டு**
**இந்த மணியக்காரன் காரியம் நன்று**
**இந்த ஊர் கூடுகின்ற காரியம் கனக்கப்பிணக்காம்**
**இந்த ஊரிலே வியாபாரம் போட மத்திபம்**

**இந்த ஊரிலே குழயிருக்கக் கடன்படுவான்**
**கடன் கொடுத்து வாங்க லாப முண்டு**
**கடலேறிப் போனவன் அவக்கரித்து வந்து சாவான்**
**கடலேறிப் போற காரியம் நன்றாய்ப் பலிக்கும்**

இதனால் விருப்ப நிறைவேற்றம்
முயற்சி அறியப்பெறுகின்றது

மணியம் - கிராமக் கணக்கு வேலை
கனக்கப் பிணக்காம் - மிகுந்த மனத்தாபம் ஆகும்
வியாபாரம் போட - வியாபாரம் செய்ய
அவக்கரித்து - பழி செய்து, துரோகம் செய்து



## 57. இவனுக்கு மாணியம் கொடுக்க நன்றோ தீதோ ?

**இவனுக்கு மணியங் கொடுக்க நன்று**
**இந்த மணியத்தால் லாபம் உண்டு**
**இந்த மணியக்காரன் போனகாரியம் நன்றாய் வருவான்**
**இந்த ஊர் கூடுகின்ற காரியம் துரோகத்துக் கிடமாம்**

**இந்த ஊரிலே வியாபாரம் போட மாத்தான் வரான்**
**இந்த ஊரிலே குடியிருக்க வியாபார மில்லை**
**கடன் கொடுத்து வாங்க நாள் செல்லும், நன்று**
**கடலேறிப் போனவன் சேதப்பட்டுப் பலிப்புடனே வருவான்.**

இதனால் செயலாக்கம் வாழ்க்கை
ஆகியவை அறியப்பெறுகின்றன.

மணியம் - கிராமக் கணக்க வேலை
இரண்டு வகை - உறுதிப்படாத செயல் வகை
லாபம் இல்லை - லாபம் இருக்காது
கோட்டை போட - கவியலாகப் போட
குடியிருக்க - புதிதாகக் குடியிருக்க

## 58. கூட்டு மணியஞ் செய்ய நன்றோ, தீதோ ?

கூட்டு மணியஞ் செய்ய நன்றாய் லாபமுண்டு
இவனுக்கு மணியங் கொடுக்க நன்று
இந்த மணியத்தால் லாபம் இல்லை
இந்த மணியக்காரன் போன காரியதும் நல்ல

ஊர் கூடுகின்ற காரியம் இரண்டு வகையாயிருக்கும்
இந்த ஊரிலே கோட்டை போடப் பாழாயழியும்
இந்த ஊரிலே குடியிருக்க மிகவும் நன்று
கடன் கொடுத்து வாங்க லாபம் இல்லை.

இதனால் உத்தியோகம் ஊர்நிலை அறிவிக்கப்பெறுகின்றன

மணியம் - கிராமக் கணக்கு வேலை
இரண்டு வகை - உறுதிப்படாத செயல் வகை
லாபம் இல்லை - லாபம் இருக்காது
கோட்டை பேரட - குவியலாகப் போட
குடியிருக்க - புதிதாகக் குடியிருக்க

## 59. மணியம் மாறிப்போனவன் வருவானோ வாரானோ ?

**மணியம் மாறிப்போனவன் மீண்டும் வருவான்**
**கூட்டுமணியம் செய்ய பின்னழு முறிசல்**
**இவனுக்கு மணியம் கொடுக்க நன்று**
**இந்த மணியத்தால் ஒத்து நிற்கும். மேல் விழாது.**

**இந்த மணியக்காரன் போனகாரியம் நன்மையில்லை**
**இந்த ஊர் கூடுகின்ற காரியம் பின்பு நன்மையுண்டாம்**
**இந்த ஊரிலே வியாபாரம் போட மாத்தான் கொல்லான்**
**இந்த ஊரிலே குழயிருக்க அதிக நன்று.**

இதனால், பொறுப்புக்காரிய பலன்கள் கூறப்பட்டுள்ளன

மாறிப்போனவன் - வேறு கிராமத்திற்கு மாறிப்போனவன்
மீண்டும் வருவான் - திரும்பி வருவான்
மாத்தான் - மற்றவன், பகைவன், பங்காளி
அதிக நன்று - அதிக நன்மை.



**60. இந்தச் சீமை மணியங் கட்டிக்கொள்ள நன்றோ, தீதோ ?**

**இந்தச் சீமை மணியங் கட்டிக் கொள்ள நன்று**
**மணியம் மாறிப்போன மணியக்காரன் வரமாட்டான்**
**கூட்டு மணியஞ் செய்ய நன்றல்ல**
**இவனுக்கு மணியங் கொடுக்க நன்று**

**இந்த மணியத்தால் லாபமில்லை. நட்டம் வரும்**
**இந்த மணியக்காரன் போனகாரியம் நன்மையுண்டாய் வருவான்**
**ஊர் கூடுகின்ற காரியம் குடிகேடு வரும்**
**இந்த ஊரிலே வியாபாரம் செய்யப் பாழாயழியும்**

இந்த வாசகம் உத்தியோக பலன் கூறுகின்றது.

மணியம் கட்டிக்கொள்ள - மணியக்காரன் வேலையை ஏற்றுக்கொள்ள
குடிகேடு - குடும்ப அழிவு
காரியம் - நிர்வாகம்
பாழாயழியும் - சிதைந்து பாழாகி அழிந்து போகும்



## 61. கணக்குச் சுவாத்தியம் கிடைக்குமோ கிடைக்காதோ ?

**கணக்குச் சுவாத்தியம் கிடைக்கும் நன்று**
**இந்தச் சீமை மணியம் கட்டிக் கொள்ளப் பின்பு துரோகம்**
**மணியம் மாறிப்போன மணியக்காரன் சடக்கட்டி வருவான்**
**கூட்டு மணியம் செய்யப் பகைவரும்.**

**இவனுக்கு மணியங் கொடுக்கப் பின்னீடு துரோகம்**
**இந்த மணியத்தால் அனேக லாபம் உண்டு**
**இந்த மணியக்காரன் போனகாரியம் மத்திபம்**
**இந்த ஊர் கூடுகின்ற காரியம் ராசதரத்தைக்காண நன்று.**

இதனால் பிழைப்புப் பற்றிய விவரம் கூறப்படுகின்றது

சுவாத்தியம் - உரிமையாக வரும் பதவி, சுவாரி
சடக்கட்டி - சீக்கிரம் முடித்துக்கட்டி, பழிதிட்டம்
பின்னீடு - பிற்காலத்தில்
ராசதரம் - அரசாங்கப் பதவியாளர்
தரம் - மேல் தரம் உடையவர்

**62. இவனண்டையிலே சேவிக்க நன்றோ, தீதோ ?**

**இவனண்டையிலே சேவிக்க நன்மையாம் ; நன்று**
**கணக்குச் சுவாத்தியம் அமரும். அற்ப லாபம்**
**இந்தச் சீமை மணியங்கட்டி ஆள மிகவும் நன்று**
**மணியம் மாறிப்போன மணியக்காரன் வரத்தாமிதம்**

**கூட்டு மணியஞ்செய்ய வெகு சண்டை வரும்**
**இவனுக்கு மணியங் கொடுக்கத் தேடியிடுவான்**
**இந்த மணியத்தால் லாபமுண்டு. நன்மையாம்**
**இந்த மணியக்காரன் போன காரியம் மிகவும் நன்று.**

இதனால் ஊதிய காரியம், பிழைப்பு நிலை
அறிவிக்கப்பெறுகின்றன.

அண்டை - பக்கம். இவனிடம்
சேவிக்க - பணிசெய்ய, சொன்னபடி செய்ய
சுவாத்தியம் - பதவி உரிமை
அமரும் - அமையும், கிடைக்கும்
அற்ப லாபம் - சிறிதான லாபம்
மணியம்கட்டி ஆள - மணியப்பதவி பெற்று அதிகாரம் செய்ய
வெகு - பல, அனேக



## 63. கணக்கு வாணிபஞ் செய்யப் போனவன் வருவானோ, வாரானோ?

**கணக்கு வாணிபஞ் செய்யப் போனவன் வருவான்**
**இவனண்டையிலே சேவிக்க நன்றல்ல**
**கணக்குச் சுவாத்தியம் கிடைக்கும். வலுவந்தம்**
**இந்தச் சீமை மணியங் கட்டிக்கொள்ள நன்று**

**மணியம் மாறிப்போன மணியக்காரன் வரத்தில்லை**
**கூட்டு மணியஞ்செய்யப் பலிப்பில்லை**
**இவனுக்கு மணியங் கொடுக்கப் பின்னுக்கு நன்றல்ல**
**இந்த மணியத்தால் லாபமுண்டு.**

இதனால் எதிர்பார்த்தல், நடப்புநிலை கூறப்பெறுகின்றன

கணக்கு வாணிபம் - வியாபாரக் கணக்க வேலை
இவனண்டையிலே - இவனிடத்திலே
சேவிக்க - பணிசெய்ய
வலுவந்தம் - தானாக வலிந்து வரும் செயல்
வரத்தில்லை - வருவதாக இல்லை
பலிப்பில்லை - பலனாவதில்லை
பின்னுக்கு - பிற்காலத்தில்



**64. இந்தத் தேசத்துக்குப் போக நன்றோ, தீதோ ?**

**இந்த தேசத்துக்குப் போக நன்று**
**கணக்கு வாணிபம் செய்யப் போனவன் வருவான்**
**அவனண்டையிலே சேவிக்க நன்று**
**கணக்குச் சிவாத்தியம் அந்தத்தினால் வரும்**

**இந்தச் சீமை மணியங்கட்டிக்கொள்ளப் பிசகு வரும்**
**மணியம் மாறிப்போன மணியக்காரன் நன்மையாய் வருவான்**
**கூட்டு மணியஞ்செய்ய நன்று**
**இவனுக்கு மணியங்கொடுக்க மிகவும் நன்று.**

இதனால் பிரயாணம், காரியம் இவைகள் குறிக்கப்படுகின்றன.

இந்த தேசம் - இந்த நாடு (வெளிநாடு)
கணக்கு வாணிபம் - கணக்குத் தொழில்
சுவாத்தியம் - வேலை, உரிமைப்பதவி
அந்தத்தினால் - கடைசியில்
பிசகு - தடுமாற்றம், குறைவு
மாறிப்போனவன் - இடம் மாறிப்போனவன்
மணியம் - பொறுப்பான பதவி



**65. இந்தத் தேசத்திற்கும் இவனுக்கும்**
**தீர்க்கமுண்டோ இல்லையோ ?**

**இந்தத் தேசத்துக்கும் இவனுக்குந் தீர்க்கமுண்டு**
**இந்தத் தேசத்துக்குப் போக நன்று**
**கணக்கு வாணிபஞ் செய்யத் தடுமாற்றம்**
**இவனாண்டையிலே சேவிக்க மத்திபம்**

**கணக்குச் சுவாத்தியம் அமரும். வெகு நன்மை**
**இந்தச் சீமை மணியங்கட்டிக்கொள்ளக் குத்தால**
**சாமியினாலே நிற்கும்**
**மணியம் மாறிப்போன மணியக்காரன் வில்லடைத்**
**துக்கத்துடனே வருவான்**
**கூட்டு மணியஞ்செய்ய லாபத்துக்குச் சீவனம் உண்டாம்.**

இதனால் வரும் நன்மை, தீமை அறிவிப்பாகின்றது

தீர்க்கம் - தன்னம்பிக்கை, உறுதிப்பாடு
தடுமாற்றம் - நிலையில்லாத செயல்
மத்திபம் - குறைவு வராது
அமரும் - நிலைக்கும்
வில்லடைத் துக்கம் - தாழ்வு நிலையால் வருத்தம்
சீவனம் - நல்வாழ்வு



## 66. இந்த ராசாவின் பேரிலே தண்டு வருமோ வராதோ ?

**இந்த ராசாவின் பேரில் தண்டு வராது**
**இந்த தேசத்திற்கும் இவனுக்கும் தீர்க்கம் இல்லை**
**இந்த தேசத்துக்குப் போகப் பலனுண்டு**
**கணக்கு மணியஞ் செய்யப் போனவர் சுகமே வருவார்**

**இவனண்டையிலே சேவிக்க அதிக பாக்கியம் வரும்**
**கணக்குச் சுவாத்தியம் ஒரு சிவலையாலே தட்டுண்டு போய்ப் பின்பு வரும்**
**இந்தச் சீமை மணியம் கட்டிக்கொள்ள வெகு சுவாத்தியம் உண்டு**
**மணியம் மாறிப்போன மணியக்காரன் மிதாதமாய்ப் பார்த்து வருவான்.**

இதனால் நாட்டுநிலை, விபரம் கூறப்பெறுகின்றது

ராசா - அரசன்
தண்டு - படையெடுப்பு
தீர்க்கம் - ஒட்டுறவு, நம்பிக்கை
சுகமே வருவார் - நல்ல பலனுடன் வருவார்
அதிக பாக்கியம் - அதிக செல்வம்
ஒரு சிவலை - ஒரு மனஸ்தாபம். ஒரு தகராறு
தட்டுண்டு - தட்டிப்போய்
வெகு சுவாத்தியம் - நிறைந்த உரிமைகள்
தாமிதமாய் - காலங்கடந்த நிலையில்



**67. இந்தத் தலத்தில் இவனுக்கு வீடுகட்ட நன்றோ, தீதோ ?**

**இந்தக் தலத்தி லிவனுக்கு வீடுகட்டச் சுகமேமிருப்பான்**
**இந்த ராசாவின் பேரில் தண்டு வரும்**
**இந்தத் தேசத்துக்கும் இவனுக்கும் தீர்க்கமுண்டு**
**இந்தத் தேசத்துக்குப் போக வேண்டாம்**

**கணக்கு வாணிகஞ் செய்யப் போனவருக்குச் சுகமில்லை**
**இவனண்டையிலே சேவிக்கப் பின்னடி துரோகம் வரும்**
**கணக்குச் சுவாத்தியம் வந்து நீடித்து நடக்கும்**
**இந்தச் சீமை மணியங் கட்டிக்கொள்ள நீடித்து நடக்கும்**

இதனால் குடியிருப்பு, உத்தியோகம் ஆகியவை கூறப்பெறுகின்றன.

தலம் - மனை, நிலம்
தண்டு - படையெடுப்பு, சேனை
தீர்க்கம் - நட்புறவு, நல்லெண்ணம்
பின்னடி - பிற்காலத்தில்
துரோகம் - வஞ்சகச் செயல்
சீமை - நாடு



**68. வீட்டுக்கு மச்சிட நன்றோ, தீதோ?**

**வீட்டிற்கு மச்சிட மத்திபம்**
**இந்தத் தலத்தில் இவனுக்கு வீடுகட்ட நன்று**
**இந்த ராசாவின் பேரில் படைவந்து உயித்தமாம்**
**இந்தத் தேசம் இவனுக்குச் செல்லாது.**

**இந்தத் தேசத்துக்குப் போக நன்று**
**கணக்கு வாணிபம் செய்யப்போனவர் வர நாள் செல்லும்**
**இவனண்டையிலே சேவிக்கப் பிரயோசனம் இல்லை**
**கணக்குச் சுவாத்தியம் வரும். அதிக பாக்கியம் வரும்.**

இதனால் வீடு, மனை, பாக்கியம் உணர்த்தப்படுகின்றன

மச்சி - உள் மரப்பரண், வீட்டினுள் உத்திரத்தின் மேல்
அடைக்கப்படும் மரத்தாலான பரண்
தலம் - பூமி, நிலம்
உயித்தமாம் - போர் நிகழும்
பிரயோஜனம் - பயன்
பாக்கியம் - செல்வம், அந்தஸ்து



### 69. இந்த வீடு பிரித்துக்கட்ட நன்றோ, தீதோ ?

**இந்த வீடு பிரித்துக்கட்டப் பெருகநன்மையாம்**
**இந்த வீடு மச்சிடப் புத்திர சம்பத்துண்டு**
**இந்தத் தலத்தில் வீடு கட்ட லாபம்**
**இந்த ராசாவின் பேரில் தண்டு வரும்.**

**இந்த தேசம் இவனுக்கு நன்றாய்ச் செல்லும்**
**இந்தத் தேசத்துக்குப்போக அலசழி சண்டை வரும்**
**கணக்கு வாணிபஞ் செய்ப் போனவன் வருவான்**
**இவனண்டையிலே சேவிக்கப் பின்பு வரும்.**

இந்த வாசகத்தால் வீடு கட்டுதல், வெளியூர்ப் பயணம் ஆகியவை பற்றிக் கூறப்பட்டுள்ளது

பெருக - மிகுதியாக
மச்சிட - மச்சிக்கட்டி வைக்க
தலம் - பூமி, மனை
தண்டு - சேனை
நன்றாய் - சிறப்பாக
சேவிக்க - ஊழியம் செய்ய
அலசழி - வீண் பழி

◘◘◘

## 70. இந்த வீட்டுக்குக் கூடங்கட்ட நன்றோ தீதோ ?

**இந்த வீட்டுக்குக் கூடம் கட்டச் சடுதியிலே கலியாணம்**
**இந்த வீடு பிரித்துக் கட்ட நன்று**
**இந்த வீட்டிற்கு மச்சிட நன்று**
**இந்தத் தலத்தில் வீடுகட்டச் சுகமேயிருப்பான்**

**இந்த ராசாவின் பேரில் வந்த தளம் அகலப்போம்**
**இந்தத்தேசம் இவனுக்குத் தீர்க்கமுண்டாய்ச் செல்லும்**
**இந்தத் தேசத்துக்குப்போகப் பலவகையிலும் நன்றல்ல**
**கணக்கு வாணிபஞ் செய்யப் போனவர் வருகிறார்.**

இதனால் மனைவளம், ஆதரவு, ஊழியம் பற்றிய
பலன்கள் கூறப்பட்டுள்ளன

கூடம் - வீட்டினுள் அமைக்கப்படும் விசாலமான இடம்
சடுதி - விரைவாக
பிரித்து - தனித்தனியே பிரித்து
மச்சு - உள் பரண்
வந்த தளம் - வந்த படையெடுப்பு
அகலப்போம் - அகன்று போகும்
தீர்க்கம் - நற்பலன்

## 71. இந்தப் பெண்ணைக் கொள்ள நன்றோ தீதோ ?

**இந்தப் பெண்ணைக் கொள்ளப்போகச் சாவு வரும்**
**இந்த வீட்டுக்குக் கூடம் கட்டத் துணை வந்திருக்கும்**
**இந்த வீடு பிரித்துக்கட்டத் தீ தீய்ப்பட்டுக் கேடுவரும்**
**இந்த வீட்டிற்கு மச்சிட நன்று.**

**இந்தத் தலத்தி லிவனுக்கு வீடுகட்ட ஒரு வருசத்திலே சாவு வரும்**
**இந்த நாட்டு ராசாவின் பேரில் தளம் வராது**
**இந்தத் தேசம் இவனுக்குச் செல்லாது பாழாம்**
**இந்தத் தேசத்துக்குப் போய்ப் பலவகையிலும் நன்மை.**

இதனால் வீடு, புது உறவு, நாட்டு நிலைமை
உணர்த்தப்படுகின்றன

கொள்ள - திருமணம் செய்து கொள்ள
துணை - துணையான உறவு
தீ தீய் - கொடிய நெருப்பு
தளம் வராது - பகை படையெடுப்பு வராது
செல்லாது - செல்வாக்கு இல்லை
போய் - போவதினால்



**72. இந்தப் பெண்ணை மாமி வீட்டுக்கு விட நன்றோ, தீதோ ?**

**இந்தப் பெண்ணை மாமி வீட்டுக்கு விட நன்று**
**இந்தப் பெண்ணைக் கொள்ள வினை நாடும்**
**இந்த வீட்டுக்குக் கூடங்கட்ட அதனாலே புத்தெடுக்கும்**
**இந்த வீடு பிரித்துக் கட்ட குடி கெடும்.**

**இந்த வீட்டுக்கு மச்சிடத் தீய்ப்படும். பொல்லாது**
**இந்தத் தலத்தில் இவனுக்கு விடுகட்ட அனேக**
**சம்பத்துண்டாம்**
**இந்த ராசாவின் பேரில் கலகம் வரும்**
**இந்தத் தேசத்துக்கும் இவனுக்கும் முடிய நன்றாய்ச்**
**செல்லும்.**

இதனால் செய்வதும், தவிர்ப்பதும் அறிவிப்பாகின்றது

கொள்ள – மருமகளாகக் கொள்ள, மணந்துகொள்ள
வினை – கெடுதி
நாடும் – நாடி வரும்
புத்தெடுக்கும் – கரையான் புற்று வளரும்
குடிகெடும் – குடி இருப்பது கெட்டுப்போகும்
முடிய – கடைசி வரையில்

**73. இந்தப் பெண்ணுக்குப் பனுதி பண்ணியிட நன்றோ, தீதோ ?**

**இந்தப் பெண்ணுக்குப் பனுதி பண்ணியிட நன்று**
**இந்தப் பெண்ணை மாமி வீட்டிற்கு விடத் தீது**
**இந்தப் பெண்ணைக் கொள்ளச் சுகமுண்டு**
**இந்த வீட்டிற்குக் கூடக்கட்டடம் பெருக நன்று.**

**இந்த வீடு பிரித்துக்கட்டக் கன்மம்போம் நன்மையுண்டு**
**இந்த வீட்டிற்கு மச்சிட மிகவும் நன்று**
**இந்தத் தலத்தி லிவனுக்கு வீடகட்டச் சிலுகு பிழைப்புக்கும் பற்றாது**
**இந்த ராசாவின் பேரில் சண்டைவந்து சமாதானமாம்.**

இந்த வாசகம் பேரில் சண்டைவந்து சமாதானமாம்.

பனுதி பண்ணி இட - பாகப்பிரிவினை செய்துவிட
பனுதி (பணுதி) - சொத்துப் பாகப் பிரிவினை, சீர் வரிசை பருவப் பாதுகாப்பு, சொத்துரிமை
பெருக நன்று - மிகவும் நன்று
கன்மம் - வந்த வினை போகும்
தலம் - பூமி, மனையிடம்
சிலுகு - சச்சரவு
பிழைப்புக்குப் பற்றாது - பிழைப்புக்கு வருமானம் பற்றாது.

▣▣▣

## 74. ஊருக்குப்போய்ப் பெண்ணை அழைத்துவர நன்றோ, தீதோ ?

**ஊருக்குப் போய் பெண்ணை அழைத்துவர நன்று**
**இந்தப் பெண்ணுக்குப் பனுதி பண்ணியிட நன்று**
**இந்தப் பெண்ணை மாமி வீட்டிற்கு விட நன்று**
**இந்தப் பெண்ணைக் கொள்ள வழக்குப் பயப்படுவான்**

**இந்த வீட்டிற்குக் கூடங் கட்டச் சண்டை வரும்**
**இந்த வீடு பிரித்துக்கட்ட நன்மையுண்டாம்**
**இந்த வீட்டிற்கு மச்சிட நன்மையுண்டாம்**
**இந்தத் தலத்திலிவனுக்கு வீடுகட்டச் சம்பத்துண்டாம்.**

இதனால் செய்யத்தக்கது கூறப்படுகின்றது

பெண்ணை – தன் மகளை, மருமகளை
பனுதி பண்ணியிட – பாகப்பிரிவினை செய்திட
கொள்ள – திருமணம் செய்து கொள்ள
மச்சு இட – உள் பரண் அமைக்க, மாடி செய்ய
சம்பத்து – எல்லா வகையான செல்வம்

ஃஃஃ

## 75. இந்தக் கெற்பம் ஆணோ, பெண்ணோ ?

**இந்தக் கெற்பம் பெண் பெறுவாள்**
**ஊருக்குப் போய்ப் பெண்ணை அழைத்துவர நன்று**
**இந்தப் பெண்ணுக்குப் பனுதியிட நன்று**
**இந்தப் பெண்ணை மாமி வீட்டுக்கு விட வாழாது.**

**இந்தப் பெண்ணைக் கொள்ள மலடியாயிருப்பாள்**
**இந்த வீட்டிற்குக் கூடங்கட்ட வியாதிகொள்வான்**
**இந்த வீடு பிரித்துக்கட்டப் பெருக நன்று**
**இந்த வீட்டிற்கு மச்சிடப் புத்திர சம்பத்துண்டாம்.**

இதனால் குடும்ப பாக்கியங்கள் கூறப்படுகின்றன

கெற்பம் - பெண் கொண்டுள்ள கெற்பம், கருப்பம்
பனுதியிட - பாகப்பிரிவினை, சீர் வரிசை
பெண்ணை அழைத்துவர - தன் பெண்ணை மாமியகத்திருந்து அழைத்துவர
மலடி - பிள்ளைப் பேறில்லாதவள்
பெருக - மிகுதியாக
புத்திரர் - பிள்ளைகள்



## 76. இந்தப் பிள்ளையைத் தொட்டிலேற்ற நன்றோ ? தீதோ ?

**இந்தப் பிள்ளையைத் தொட்டிலேற்ற நன்று**
**இந்தக் கெற்பம் பெண் பெறுவாள்**
**ஊருக்குப் போய்ப் பெண்ணை அழைத்துவர, வந்த பின்பு காவு**
**இந்தப் பெண்ணுக்குப் பனுதியிட நன்று.**

**இந்தப் பெண்ணை மாமிவீட்டிற்கு விட நன்று**
**இந்தப் பெண்ணைக் கொள்ளச் சகல பாக்கியமுண்டு**
**இந்த வீட்டிற்கு மச்சிட அதிக சண்டை வரும்**
**இந்த வீடு பிரித்துக்கட்ட நாலுவகைச் சம்பத்துமுண்டாம்.**

இதனால் இல்வாழ்க்கை, கடமைகள் அறிவிக்கப்படுகின்றன.

தொட்டிலேற்றுதல் – பிறந்த குழந்தையை மூன்று மாதத்தில் தொட்டியில் இடும் நற்செயல்
பனுதியிட – பாகப்பிரிவினை செய்ய, சீர் முறையிட
பாக்கியம் – நிறைந்த சுக வாழ்வு
நாலுவகை – தன்னால், பொருளால், தானியத்தால், உரிமையால்



**77. இந்தப் பிள்ளைக்குக் காது குத்த நன்றோ, தீதோ ?**

**இந்தப் பிள்ளைக்குத் காதுகுத்த நன்று**
**இந்தப் பிள்ளையைத் தொட்டிலேற்ற நன்று**
**இந்தக் கெற்பம் பெண்பெறுவாள். இராது**
**ஊருக்குப்போய்ப் பெண்ணை அழைத்துவர ஆகாது**

**இந்தப் பெண்ணுக்குப் பனுதியிடப் பணையம் வைப்பான்**
**இந்தப் பெண்ணை மாமிவீட்டுக்குவிடச் சண்டை வரும்**
**இந்தப் பெண்ணைக் கொள்ளச் சிறிதுநாள்**
**பொருந்தி வாழாது**
**இந்த வீட்டிற்குக் கூடங்கட்ட உடனே கலியாணமுண்டாம்.**

இதனால் முறைமைகள் பற்றிய ப லன்கள் காட்டப்பட்டுள்ளன

காதுகுத்துதல் - குழந்தைக்குச் செய்யும் காதணி விழா
இராது - தங்காது
ஆகாது - நன்மையாகாது
பணையம் - பொருள் ஈடு
பொருந்தி - ஒன்றுபட்டு அடங்கி
கலியாணம் - திருமணம்



**78. இந்தப் பிள்ளையைப் பள்ளிக்கு வைக்க நன்றோ, தீதோ ?**

**இந்தப் பிள்ளையைப் பள்ளிக்கு வைக்க நன்று**
**இந்தப் பிள்ளைக்குக் காதுகுத்த நன்று**
**இந்தப் பிள்ளையைத் தொட்டிலேற்ற நன்மையுண்டு**
**இந்தக் கெற்பம் ஆண்பிள்ளை வித்துவானாவான்.**

**ஊருக்குப்போய் பெண்ணை அழைத்து வந்தாலும் வாழாது**
**இந்தப் பெண்ணுக்குப் பனுதியிடப் பணி பலிக்கும்**
**இந்தப் பெண்ணை மாமி வீட்டிற்கு விட நன்று**
**இந்தப் பெண்ணைக் கொள்ளச் சுகமே வாழ்ந்திருக்கும்.**

இதனால் செய்ய வேண்டிய கடமைகள் கூறப்பட்டுள்ளன

பள்ளிக்கு வைக்க - பள்ளிக்கூடத்தில் படிக்க வைக்க
காதுகுத்த - காதணி விழா செய்ய
வித்துவான் - கல்வியில் தேர்ந்தவன்
பணி - செய்த செயல்
சுகமே - நலமாக நன்மையுடனே

## 79. இந்தப் பிள்ளை பாக்கியவானாவானோ, ஆகானோ ?

**இந்தப் பிள்ளை பாக்கியவானாவான்**
**இந்தப் பிள்ளையைப் பள்ளிக்கு வைக்க நன்று**
**இந்தப் பிள்ளைக்குக் காதுகுத்த நான்றாய் வளரும்**
**இந்தப் கெற்பம் விருத்தமாய் அழிந்து போகும்**

**ஊருக்குப்போய் பெண்ணை அழைத்துவர நன்று**
**இந்தப் பெண்ணுக்குப் பனுதியிட நன்று**
**இந்தப் பிள்ளையை தொட்டிலேற்ற நன்று**
**இந்தப் பெண்ணை அழைத்துவர நன்றாய் வாழ்வான்.**

இதனால் எதிர்கால பலன் அறிவிப்பாகின்றது

பாக்கியவான் - செல்வச் சீமான்
பள்ளிக்கு வைக்க - படிக்க வைக்க
பனுதியிட - பாகப்பிரிவினை செய்ய
நன்றாய் வளரும் - நல்ல திட்டமுடன் வளரும்
விருத்தமாக - வீணாக
நன்றாய் வாழ்வாள் - நன்றாகக் குடும்பம் செய்வாள்.



**80. இந்தப் பிள்ளை, காசுகொண்டு விற்க நன்றோ, தீதோ ?**

**இந்தப் பிள்ளை காசுகொண்டு விற்க நன்று**
**இந்தப் பிள்ளை பாக்கியத்துக்கும் ; பள்ளிக்கும் வைக்கப் புத்தியுண்டாம்**
**இந்தப் பிள்ளையைப் பள்ளிக்கு வைக்கப் புத்திமானாவான்**
**இந்தப் பிள்ளைக்குக் காதுகுத்த மத்திபம்**

**இந்தப் பிள்ளையைத் தொட்டிலேற்ற முலைசுரக்க மத்திபம்**
**இந்தக் கெற்பம் ஆண் பிள்ளை. தாய் முடப்படுவாள்**
**ஊருக்குப் போய்ப் பெண்ணை அழைத்துவரவேண்டாம் சிலுகு வரும்**
**இந்தப் பெண்ணுக்குப் பனுதியிட மெத்த நன்று.**

இதனால் செய்வது, நீக்குவது உணர்த்தப்படுகின்றது.

காசு கொண்டு விற்க - பிள்ளையைத் தத்து கேட்போரிடம் காசு வாங்கிக் கொண்டு விற்க

பாக்கியம் - சொத்து

புத்திமான் - அறிவாளி

முடப்படுவாள் - ஊனப்படுவாள்

சிலுகு - சச்சரவு, சிறு பிணக்கு

பனுதியிட - மனையிடத்தில் தனிக்குடித்தனம் பிரித்து வைக்க



**81. வைப்பாட்டி வைக்க நன்றோ, தீதோ ?**

**வைப்பாட்டி வைக்க நன்மை**
**இந்தப் பிள்ளை காசு கொண்டு விற்க நன்று**
**இந்தப் பிள்ளை பாக்கியத்துக்கு புண்ணியனாவான்**
**இந்தப் பிள்ளை பள்ளிக்கு வைக்க நன்று.**

**இந்தப் பிள்ளைக்குக் காதுகுத்த உருகிப்போம்**
**இந்தப் பிள்ளையைத் தொட்டிலேற்றக் குழித்தோசப்**
**பட்டுப் பொருக்கும்**
**இந்தக் கெற்பம் ஆண் பிள்ளை சகலபாக்கியவானாவான்**
**ஊருக்குப் போய் பெண்ணை அழைத்துவர மாமியுடன்**
**கூடி வாழ்வாள்**

இதனால் தேவைக்கானவை செய்யக் கடமைப்பட்டவை பேசப்படுகின்றன.

காசு கொண்டு விற்க - பிள்ளையைத் தத்துக் கொடுக்க
பாக்கியம் - செல்வச் சீமான்
உருகிப்போம் - இளைத்துப் போகும்
குழிதோஷம் - சிறுபிள்ளைகட்கு வரும் தோஷ நலிவுகளில் ஒன்று

## 82. இரண்டு பெண் கொள்ள நன்றோ, தீதோ ?

**இரண்டு பெண் கொள்ள நன்று**
**வைப்பாட்டி வைக்க வேண்டாம்**
**இந்தப் பிள்ளை காசுகொண்டு விற்க நன்று**
**இந்தப் பிள்ளை சுகமே வாழ்ந்திருப்பான்.**

**இந்தப் பிள்ளையைப் பள்ளிக்கு வைய்க்க மணியம் பண்ணுவான்**
**இந்தப் பிள்ளைக்குக் காதுகுத்த உடனே புண்ணாகும்**
**இந்தப் பிள்ளையைத் தொட்டிலேற்ற அற்றைக்குளவி பற்றாது**
**இந்தக் கெற்பம் ஆண் பிள்ளை சுகமேயிருக்கும்.**

இதனால் குடும்ப விருத்தி, வாழ்வு ஆகியவை குறிக்கப்படுகின்றன.

அற்றைக்குளவி - அன்று அமைந்த தொட்டில்
இரண்டு பெண் கொள்ள - இரு மனைவியரைக் கொள்ள
விற்க நன்று - தத்துப் பிள்ளையாகக் கொடுக்க நன்று (சுவீகாரம்)



**83. இந்தப் பெண் ஆணும் பெண்ணும் பெறுமோ, பெறாதோ ?**

**இந்தப் பெண் ஆணும் பெண்ணும் இல்லாமல் வாழும்**
**இரண்டு பெண் கொள்ள உள்வினை உண்டு**
**வைப்பாட்டி வைக்க நன்மையாகும்**
**இந்தப் பிள்ளை காசுகொண்டு விற்க ராச்சியமாளுவான்.**

**இந்தப் பிள்ளை எல்லாவற்றிலும் புத்திமானாவான்**
**இந்தப் பிள்ளையைப் பள்ளிக்கு வைக்க புராண காவியங்களில் வல்லவன்**
**இந்தப் பிள்ளைக்குக் காதுகுத்த நன்றாய் வளரும்**
**இந்தப் பிள்ளையைத் தொட்டிலேற்ற வியாதியணுகிச் சாகும்**

இதனால் வமிச விருத்தி பற்றி அறியப்பெறுகின்றது

இல்லாமல் - பெற்று வளர்க்காமல்
உள்வினை - உள்பகை
ராச்சியம் - நாடு, நாடாள்வான்
வியாதி அணுகி - வியாதி பற்றிக்கொண்டு
வைப்பாட்டி - (பொருள் தெரிந்ததேயாகும்)

## 84. மஞ்சள் நீர்க்குடுத்துப் பிள்ளை வளர்க்க நன்றோ, தீதோ ?

**மஞ்சள் நீர் கொடுத்துப் பிள்ளை வளர்க்க நன்று**
**இந்தப் பெண் ஆணும் பெண்ணும் இல்லாமல் மலடியாயிருப்பாள்**
**இரண்டு பெண் கொள்ள நன்று**
**வைப்பாட்டி வைக்க மயிர்ப்பிடி சண்டை வரும்.**

**இந்தப் பிள்ளை காசுகொண்டு விற்க நன்று**
**இந்தப் பிள்ளை செயமானாய்ச் சுகமேயிருப்பான்**
**இந்தப் பிள்ளையைப் பள்ளிக்கு வைக்கக் கட்டைபுத்தி யாவான்**
**இந்தப் பிள்ளைக்குக் காதுகுத்த நன்றாய் வளரும்.**

இதனால் வழக்கங்களால் வரும் பலன் கூறப்பெறுகின்றது

மஞ்சள் நீர் கொடுத்துப் பிள்ளை வளர்த்தல் பழங்காலப் பாண்டிய நாட்டுத் தன வணிகர் சமூக வழக்கம்

மயிர்பிடி சண்டை - இரு பெண்கள் புரியும் கொடிய சண்டை
இருவர் - மனைவி, வைப்பாட்டி
செயமான் - நினைத்ததைச் செயல்படுத்தும் செல்வன்
கட்டை புத்தி - மழுங்கிய அறிவு, முட்டாள்.

ஐஐ

**85. ஒரு இடத்துக்கு ஊர்வழி போக நன்றோ, தீதோ ?**

**ஒருயிடத்துக்கு ஊர்வழி போக நன்று**
**மஞ்சள் நீர்குடித்துப் பிள்ளை வளர்க்க நன்று**
**இந்தப்பெண் ஆணும் பெண்ணும் மூன்று பிள்ளைகளைப் பெறுவாள்**
**இரண்டு பெண் கொள்ளச் சண்டை ஒழியாது**

**வைப்பாட்டி வைக்க இரண்டு தாரமும் பொருந்தி வாழும்**
**இந்தப் பிள்ளை காசுகொண்டு விற்க நட்டம் வரும்**
**இந்தப் பிள்ளை வியாதிகொண்டு அற்பாயுசா யிருப்பான்**
**இந்தப் பிள்ளையைப் பள்ளிக்கு வைய்க்க நன்று.**

இந்த வாசகம் வெளியூர் போதல், வாழ்க்கை வசதி ஆகியவற்றை நிலைப்படுத்துகின்றது.

ஓர் இடம் - ஓர் ஊரிலுள்ள இடம்
ஊர் வழி போதல் - இடையே பல ஊர்கள் வழியாகச் செல்லல்
ஒழியாது - ஓயாது, நீங்காது
நட்டம் - (நஷ்டம்) பொருள் இழப்பு
பள்ளிக்கு வைய்க்க - பள்ளியில் படிக்க வைக்க

## 86. ஊர்வழி போனவன் வருவானோ, வாரானோ ?

**ஊர்வழி போனவன் கடுக வருவான்**
**ஒரு இடத்துக்கு ஊர்வழி போகவேண்டாம்**
**மஞ்சள் நீர் குடுத்துப் பிள்ளை வளர்க்க மத்திபம்**
**இந்தப் பிள்ளை ஆணும் பெண்ணும் பெறுவாள்**

**இரண்டு பெண் கொள்ளப் பொருந்தி வாழும்**
**வைப்பாட்டி கொள்ள இரண்டு பேருக்கம் ஆண்பிள்ளை யுண்டாம்**
**இந்தப் பிள்ளை காசுகொண்டு விற்க கொள்ளையிலே பறியாம்**
**இந்தப் பிள்ளை மிகவும் சாதுவாயிருப்பான்.**

இதனால் எதிர்பார்ப்பு நிகழ்வது குறிக்கப்படுகின்றது.

ஊர்வழி போனவள் - வெளியூர்க்குச் சென்றவன்
கடுக - விரைக
பொருந்தி வாழும் - நட்புறவோடு வாழ்வார்கள்
கொள்ளையிலே பறியாம் - கொள்ளை நோயினால் இழப்பாகும்
சாது - அமைதியான பண்பு



## 87. ஒடிப்போனவர் வருவாரோ, வரமாட்டாரோ ?

**ஓடிப் போனவர் இன்று பின்பு வருவார்**
**ஊர்வழிப் போனவர் பக்கலுடனே வருவான்**
**ஒரு இடத்துக்குஊர் வழி போக நன்று**
**மஞ்சள் நீர் குடித்துப் பிள்ளை வளர்க்க நன்று**

**இந்தப் பெண் பெண்ணும் ஆணும் பெற்றுப் பிள்ளையும் பெண்ணும் பெறுவாள்**
**இரண்டு பெண் கொள்ளப் பிள்ளைகளுண்டாகும்**
**வைப்பாட்டி வைக்கக் குடும்பக்கேடு வரும்**
**இந்தப் பிள்ளைக் காசுகொண்டு விற்க அபத்தனாய்ப் போவான்**

இதனால் மனக்கலக்கம், செயல் விளைவு கூறப்படுகின்றது

ஓடிப்போனவர் - குடும்பச் சச்சரவினால் வீட்டை விட்டு ஓடிப்போனவர்
பக்கலுடனே - பக்கத் துணையுடனே
குடும்பக்கேடு - குடும்பத்தில் கெடுதி
அபத்தன் - ஒன்றுக்கும் உதவாதவன்



## 88. இவர்கள் வெறுப்பு தீருமோ, தீராதோ ?

**இவர்கள் வெறுப்பு உறவாய் ஒன்றாகும்**
**ஓடிப் போனவன் தானே வருவான்**
**ஊர்வழிப் போனவன் சடுதியிலே வருவான்**
**ஒரு இடத்துக்கு ஊர்வழிப்போக அலச்சட்டையாம்**

**மஞ்சள் நீர் குடித்துப் பிள்ளை வளர்க்க உதவியுண்டு**
**இந்தப்பெண் ஒரு பிள்ளையைப் பெற்ற அளவில் இருப்பாள்**
**இரண்டு பெண் கொள்ளக் குடும்பக்கேடு வரும்**
**வைப்பாட்டி வைக்கப் பிள்ளையுண்டாம். கனக்க வாழும்.**

இதனால் குடும்ப நிலைகள் நிகழ்வதும் வருவதும் அறிவிக்கப்படுகின்றது.

வெறுப்பு - தவறான எண்ணத்தினால் உண்டான அச்சத்தன்மை
உறவாய் - உறவு முடையதாய்
சடுதியில் - வெகு விரைவில்
அலச்சட்டை - வீண் அலைச்சல்
குடும்பக்கேடு - குடும்பத்தில் தீங்கு உண்டாகும்
கனக்க வாழும் - பெருகி வாழும்



**89. எண்ணிய கருமம் நன்றோ, தீதோ ?**

**எண்ணிய கருமம் பெருக நன்று**
**இவர்கள் வெருப்புப் பூசலாய்ப் பின்பு தீரும்**
**ஒழப்போனவன் உறவின் மனிதராலே வருவான்**
**ஊர்வழிப் போனவன் பிணக்காய் வருவான்**

**ஒரு இடத்துக்கு ஊர்வழிப்போக நன்று**
**மஞ்சள் நீர்குழத்துப் பிள்ளை வளர்க்க, அந்தப் பிள்ளை ஒழப்போவான்**
**இந்தப் பெண், ஆணும் பெண்ணும் பெற்றுக் கனக்க வாழும்**
**இரண்டு பெண் கொள்ள, உயிர்ச்சேதம் வரும்.**

இதனால் காரியத்திட்டம் கணிக்கப்படுகின்றது

கருமம் - மனிதன் செய்ய நினைத்த செயல்
பெருக நன்று - மிகவும் நன்மையாகும்
வெருப்பு - அச்சவுணர்வு
பூசல் - ஓயாத சண்டை
பிணக்காய் வருவான் - போன இடத்தில் மனம் மாறுபட்டு வருவான்
உயிர்ச்சேதம் - உயிரழிவு
உறவின் மனிதர் - சுற்றத்தார்



## 90. பிறந்த விசனம் பொய்யோ, மெய்யோ ?

**பிறந்த விசனம் பொய்யாம்**
**எண்ணிய கருமம் நன்மையில்லை**
**இவர்கள் வெறுப்பு உறவாகும் ; பயமில்லை**
**ஒழுப்போனவன் தானே வருவான்**

**ஊர்வழிப் போனவன் வர நாள் செல்லும், பயமில்லை**
**ஓர் இடத்துக்கு ஊர்வழிப்போக நன்றல்ல – மத்திபம்**
**மஞ்சள் நீர்குழித்துப் பிள்ளை வளர்க்க நன்றல்ல**
**இந்தப்பெண் ஆணும் பெண்ணும் இல்லாமல் சுகமே இருப்பாள்**

இந்த வாசகம் மனத்தைப் பற்றியும், எதிர்பார்ப்பு பற்றியும் கூறுகின்றது.

பிறந்த விசனம் – மனத்தில் உண்டான கவலை
கருமம் – செயல், தொழில்
வெறுப்பு – மனக்கசப்பு, பற்றில்லாமை
தானே – தானாகவே
இல்லாமல் – பிள்ளை இல்லாமல்.

௨௦௩

## 91. இந்தப் படை வெல்லுமோ, வெல்லாதோ ?

**இந்தப் படை நன்றாக வெல்லும்**
**பிறந்த விசனம் பொய்யாம்**
**எண்ணிய கருமம் நன்று**
**இவர்கள் வெறுப்புத் தங்களிலே உறவாம்**

**ஓடிப்போனவன் தானே வருவான்**
**ஊர்வழி போனவன் சடுதியிலே வருவான்**
**ஒரு இடத்துக்கு ஊர்வழிபோக மிகவும் நன்று**
**மஞ்சள் நீர் கொடுத்துப் பிள்ளை வளர்க்க மிகவும் நன்று.**

இதனால் நடைமுறை வாழ்க்கைப் பலன் உணர்த்தப்படுகின்றது

பிறந்த விசனம் - தோன்றிய கவலை
எண்ணிய கருமம் - திட்டமிட்டு நினைத்த காரியம்
வெறுப்பு - பகையுணர்வு
சடுதியிலே - வெகு விரைவில்



## 92. காணி காட்சி கொள்ள நன்றோ, தீதோ ?

**காணி காட்சி கொள்ள மிகவும் நன்று**
**இந்தப் படை வெற்றிபெறும் ; சாவுண்டு**
**பிறந்த விசனம் பொய்யாது மெய்யாம்**
**எண்ணிய கருமம் நன்று. பயமில்லை.**

**இவர்கள் வெறுப்பு ஒருக்காலும் தீராது**
**ஓடிப்போனவன் வருமாப்போலே வருகின்றான்**
**ஊர்வழிப் போனவன் வியாதியாய் இருக்கிறான்**
**ஒரு இடத்துக்கு ஊர்வழிப்போக போனமிடத்தில் பிணக்காம்.**

இதனால் வருமானம், வாழ்வுநிலை கூறப்படுகின்றன.

காணி காட்சி கொள்ளல் - நிலங்களை மேற்பார்வை செய்தல்
பொய்யாது - பொய்யாகாது
ஒருக்காலும் - எக்காலத்திலும்
பிணக்கம் - மாறுபாடு உண்டாகும்
காணி காட்சி கொள்ளல் - கிராம அதிகாரம் பெறுதல். இப்பதவி அக்கால அரசில் இருந்துள்ளது.



**93. சந்தைக் குத்தகைக் கொள்ள நன்றோ, தீதோ ?**

**சந்தைக் குத்தகைக் கொள்ள நன்று**
**காணி காட்சி கொள்ளப் பலிப்புண்டு**
**இந்தப் படை எதிரே போக சண்டையிட்டு முறியும்**
**பிறந்த விசனம் பொய்யாகும்**

**எண்ணிய கருமம் நன்றல்ல செய்யவேண்டாம்**
**இவர்கள் வெறுப்பு நாளா வட்டத்திலே தானே உறவாகும்**
**ஓடிப்போனதைத் தேடிக்கண்டுக் கூட்டி வருவார்கள்**
**ஊர்வழிப் போனவன் வழியில் சண்டையாயிருக்கும்**

இதனால் நடைமுறைக் காரிய பலன் கூறப்பபெறுகின்றது

குத்தகை - குத்தகை மதிப்பு
காணி காட்சி கொள்ள - காணி மேற்பார்வை பதவி ஏற்க
பலிப்புண்டு - பலனுண்டு
முறியும் - தோல்வியடைந்து சிதையும்
விசனம் - மனக்கவலை
நாளாவட்டத்தில் - நாளுக்கு நாள்

▣▣▣

## 94. ஆள் அடிமை கொள்ள நன்றோ, தீதோ?

**ஆளடிமை கொள்ள நன்று**
**சந்தைக் குத்தகைக் கொள்ள நன்மையாம்**
**காணி காட்சி கொள்ள மத்திபம்**
**இந்தப்படை வெல்லும் அந்தப்படை முறியும்**

**பிறந்த விசனம் முந்திப் பொய் பின்பு மெய்யாம்**
**எண்ணிய கருமம் போனால் நன்மையாம்**
**இவர்கள் வெறுப்பு மனிதர் முகாந்திரத்திலே உரசு தீரும்**
**ஓடிப்போனவன் கடுக வருவான்**

இதனால் விருப்பமானவை வெறுப்பு நிலை விளக்கம்
காணப்படுகின்றன.

ஆள் அடிமை - நிலையான ஊழியன்
அந்தப்படை - பகைவர் படை முறியும்
முந்திப் பொய் - முன்னால் பொய்யாகும்
மனிதர் முகாந்தரம் - மனிதர் சொல்லும் சாட்சியங்கள்
உரசு தீரும் - பகையுணர்வ தீரும்
கடுக வருவான் - வேகமாகத் திரும்பி வருவான்



## 95. இவர்கள் பெயர் கொள்ள நன்றோ, தீதோ ?

**இவர்கள் பெயர் கொள்ள வாழ்வு வரும்**
**ஆள் அழமை கொள்ள நன்று**
**சந்தைக் குத்தகைக் கொள்ள நட்டம் வரும்**
**காணி காட்சி கொள்ளப் பாழாம்**

**இந்தப் படையாள் நன்றாக வென்று வருவான்**
**பிறந்த விசனம் சந்தேகமாகிப் பின்பு மெய்யாம்**
**எண்ணிய கருமம் எப்படியும் ஆகாது**
**இவர்கள் வெறுப்பு சிறிது நாளையிலே உறவாகும்**

இதனால் மனம் பற்றிய நோக்கங்கள் குறிக்கப்படுகின்றன

ஒருவர் பெயர் கொள்ளல் - தக்கவர் பெயரால் தொழில் வியாபாரம் செய்தல்

வாழ்வு - நல்ல வாழ்க்கை
நட்டம் - முதல் குறைவு
பிறந்த விசனம் - தோன்றிய கவலை
உறவு - ஒன்றுபட்ட செயல்



## 96. உண்ணக்கலங்கொள்ள நன்றோ, தீதோ ?

**உண்ணக் கலங்கொள்ள நன்று**
**இவர்கள் பெயர் கொண்டால் – சம்பத்துண்டாம்**
**ஆள் அடிமை கொள்ள ஓடிப்போவான்**
**சந்தைக் குத்தகைக் கொள்ள நன்று**

**காணி காட்சிக் கொள்ளத் தீர்க்கமாக நடக்கும்**
**இந்தப் படை வெல்லாது முறிந்து வரும்**
**பிறந்த விசனம் பொய்யாம்**
**எண்ணிய கருமம் பலவகையிலும் நன்று.**

இதனால் செய்யத்தக்கது முடிபு காணப்படுகின்றது

உண்ணக்கலம் - உண்ணுவதற்குரிய உலோகப்பாத்திரம்
தீர்க்கமாக - நிலையானதாக
முறிந்துவரும் - தோல்வியடைந்து வரும்
பல வகையிலும் - பலவகை வழிகளிலும்

**97. ஆனை கொள்ள நன்றோ, தீதோ ?**

**ஆனை கொள்ள, ஆனை கொண்டவன் சாவான்**
**உண்ணக் கலங்கொள்ள நன்று**
**இவர்கள் பெயர் கொண்டால் நன்று**
**ஆளழமை கொள்ள நன்று**

**சந்தைக் குத்தகைக் கொள்ள வருத்தப்பட்டு முதல் லாபம்**
**காணி காட்சி கொள்ள உதவியுண்டாம்**
**இந்தப் படை வெல்லும்**
**பிறந்த விசனம் பொய்யாம்**

இதனால் கால்நடை வணிகம், வாகனம் அறியப்பெறுகின்றன

ஆனை - யானை
கொள்ள - விலைக்குப் பெற
உண்ணக்கலம் - சாப்பிடுவதற்கமைந்த பாத்திரம் வெண்கலக்கிண்ணி
உதவி உண்டாம் - அதிகாரிகள் உதவி உண்டாகும்.

## 98. குதிரை கொள்ள நன்றோ, தீதோ ?

**குதிரை கொள்ள லாபம் இல்லை**
**ஆனை கொள்ள அனேக நன்மையாம்**
**உன்னைக் கலங்கொள்ளக் கலம் உடையும்**
**இவர்கள் பெயர் கொண்டால் – மத்திபம்**

**ஆளடிமை கொள்ள நன்று**
**சந்தை – குத்தகைக் கொள்ள மிகவும் நன்று**
**காணி காட்சி கொள்ள நட்டம் வரும்**
**இந்தப்படை வெல்லாது மீண்டும் வரும்**

இந்த வாசகம் கால்நடை, வாகனம், இராசிகரம் குறிக்கின்றது

குதிரை கொள்ள - குதிரை வாங்க
கலம் உடையும் – வெண்கலக்கிண்ணி உடைந்து போகும்
மீண்டு வரும் – வெற்றி பெறாமல் திரும்பி வரும்.

## 99. நாவிப்பிள்ளை கொள்ள நன்றோ, தீதோ ?

**நாவிப் பிள்ளை கொள்ள நன்று**
**குதிரை கொள்ள லாபம் உண்டு**
**ஆனை கொள்ளச் செய்யவும் – மிகவும் பாக்கியமுண்டு**
**உண்ணக் கலங்கொள்ள – பாலுக்குச் சோறு பற்றாது**

**இவர்கள் பேர் கொண்டால் அனேக வாழ்வு வரும்**
**ஆனை கொள்ளச் செத்துக் கெட்டுப் போகும்**
**சந்தைக் குத்தகைக்கொள்ள நன்றல்ல, வேண்டாம்**
**காணி காட்சி கொள்ள நன்றாய்ப் பலிப்புண்டு**

இதனால் வியாபாரப் பலன்கள் குறிக்கப்படுகின்றன

நாவிப்பிள்ளை – புனுகுப்பூனை
பாலுக்குச் சோறு பற்றாது – (பழமொழி) போஜன போகம்
அனேக வாழ்வு – அனேக விதமான நன்மை
நன்றாய் – முழுமையாய்

□□□

## 100. எருது கொள்ள நன்றோ, தீதோ ?

**எருது கொள்ள அனேக வாழ்வுண்டாம்**
**நாவிப் பிள்ளை கொள்ள மெத்தப் பலிப்புண்டு**
**குதிரை கொள்ள மெத்த நன்று**
**ஆனை கொள்ள மாவுத்தன் சாவான்**

**உண்ணக் கலங்கொள்ளக் கலங்கெட்டுப் போம்**
**இவர்கள் பெயர் கொண்டால் சாவு வரும். பொல்லாது.**
**ஆளடிமை கொள்ள அனேகம் நன்மையாகும்**
**சந்தைக் குத்தகைக் கொள்ள மெத்தப் பலிக்கும். நன்று.**

இதனால் வாகனவணிகம், தேவைகள் கூறப்பட்டுள்ளன.

எருது - காளை மாடு
மெத்தப்பலிப்பி - மிகவும் பலமான வருவாய்
மெத்த - மிகவும், மிகுதியான
மாவுத்தன் - யானைப்பாகன்
கலங்கெட்டுப்போம் - பாத்திரம் காணாமல் போகும்
நன்று - நன்மையாகும்.



## 101. இந்தப் பசுக்கொள்ள நன்றோ, தீதோ?

**இந்தப் பசுவைக் கொள்ள நன்று**
**எருது கொள்ளக் கெட்டுப் போகும்**
**நாவிப்பிள்ளை கொள்ள நோதல் கொண்டு சாகும்**
**குதிரை கொள்ள மெத்த லாபம் உண்டு**

**ஆனை கொள்ள லாபம் உண்டு**
**உண்ணக் கலங்கொள்ளப் பால் பற்றாது**
**இவர்கள் பெயர் கொண்டால் சகல சம்பத்துண்டாம்**
**ஆள் அடிமை கொள்ள மிகவும் நன்று**

இந்த வாகனங்களால் கால்நடை, யானை, குதிரை, உண்கலம் பெயர், விலாசம் முதலியவை அறிவிக்கப்பெறுகின்றன.

கொள்ள - விலைக்குப் பெற, தானமாகப்பெற
கெட்டுக்போகும் - நோய், திருட்டு ஆகியவற்றால் கெட்டுப்போகும்.
நாவிப்பிள்ளை - புனுகுப்பூனை
நோதல் கொண்டு - நோயினால் துன்பமுற்று
மெத்த - மிகவும்
பால் பற்றாது - மங்கலக் குறிப்பு, உணவுயோகம்
பெயர் [illegible]நதல் - இராசி உடையவர் பெயரால் [illegible]ழில்
வியாபாரம் நடத்து[illegible]
ஆள் [illegible] ஊழியன்.



## 102. எருமை கொள்ள நன்றோ, தீதோ ?

**எருமை கொள்ள மெத்தப் பலிக்கும். நன்று**
**இந்தப் பசு கொள்ள வர்த்தனை உண்டு**
**எருது கொள்ள நன்மை உண்டு**
**நாவிப்பிள்ளை கொள்ள மெத்தப் பலிப்புண்டு**

**குதிரை கொள்ள வியாதி உண்டாகித் தீரும்**
**ஆனை கொள்ளச் சம்பத்துண்டு, நாடு குலையும்**
**உன்னைக் கலங்கொள்ளப் பயணம் வைப்பான்**
**இவர்கள் பெயர் கொண்டால் யாரும் எதிரில்லை**

இந்த வாசகங்களால் கால்நடைகள், உண்கலம், பெயர், ராசி ஆகிய பலன்கள் கூறப்படுகின்றன.

மெத்தப்பலிக்கும் – மிகுந்த லாபத்துடன் பலிதமாகும்
வர்த்தனை உண்டு – விருத்தியோகம் உண்டு
தீரும் – வியாதி தீரும், குணப்படும்.
நாடு குலையும் – நாட்டில் ஒற்றுமை குலையும்
பயணம் – தகுதியான ஈடு வைப்பான்
யாவரும் எதிரில்லை – இவர்கள் பெயரால் நடத்தினால்
எத்தகையோரும் மறுக்கமாட்டார்கள். ஆதரிப்பார்கள்



## 103. உடுத்தப் புடவை கொள்ள நன்றோ, தீதோ ?

**உடுக்கப் புடவை கொள்ள நன்று**
**இந்த எருமை கொள்ளப் பலிக்கும். நன்று**
**இந்தப் பசுக் கொள்ளச் செத்துப்போம்**
**எருது கொள்ளக் குடிகேடு வரும்**

**நாவிப்பிள்ளை கொள்ள ஓடிப்போகும். வேண்டாம்**
**குதிரை கொள்ள நன்மை உண்டாம்**
**ஆனை கொள்ளத் தனிக் களிறு வரும்**
**உண்ணக் கலங்கொள்ளப் பாலுஞ் சோறும் பற்றாது**

இந்த வாசகங்களால் கால்நடைகளைப்பற்றிய செய்திகள் அறிவிக்கப்படுகின்றன

புடவை - ஆண்கள் உடுத்தும் வேட்டி, பெண்கள் உடுத்தும் சேலை முதலிய அரை ஆடைகள்
கொள்ள - விலைக்குக் கொள்ள, வாங்க
குடிகேடு - குடும்பக் கெடுதி
நாவிப்பிள்ளை - புனுகுப்பூனை
தனிக்களிறு - உயர்ந்த ஆண் யானை
பாலும் சோறும் பற்றாது - உணவு போக யோகம் உண்டாதல்

குறிப்பு : பண்டைக்கால வியாபாரிகளில், வாசனைத் திரவியங்கள் தயாரித்து விற்கும் வியாபாரிகள் உண்டு. அவர்களுள், புனுகுப் பூனையை வளர்த்து அதன்வழி புனுகினைச் சேர்த்து வியாபாரம் செய்பவர் கேட்கும் ஆரூடமாகும்.



## 104. இந்த நிலம் கொள்ள நன்றோ, தீதோ ?

**இந்த நிலங் கொள்ள நன்று**
**உடுக்கப் புடவை கொள்ள நன்று**
**இந்த எருமை கொள்ளப் பிணிதாக்கும்**
**பசுக் கொள்ள மலடாய் விடும்**

**எருது கொள்ளப் பெருக லாபமுண்டு**
**நாவிப்பிள்ளை கொள்ள நன்றல்ல வேண்டாம்**
**குதிரை கொள்ள லாபம் உண்டு**
**ஆனை கொள்ளத் திசையெல்லாம் திரையிடும். நன்று**

இந்த வாசகங்களால் நிலம், கால்நடை, ஆடை முதலியவைகள் பற்றிய செய்திகள் அறிவிக்கப்படுகின்றன

நிலம் - நன்செய், புன்செய் நிலங்கள்
உடுக்க - இடையில் கட்டிக்கொள்ள
பிணிதாக்கும் - தொற்றுநோய் தாக்கும்
மலடாய் விடும் - கன்று, சினை கொள்ளாது வறட்டு மலடாகி விடும்
பெருக லாபம் - நினைத்ததற்கு மேலான லாபம்
திசையெல்லாம் - நான்கு திசையிலும் உள்ளவர்கள் எல்லோரும்
திரையிடும் - மரியாதை, காணிக்கை செய்வார்கள்

## 105. இந்தத் தனங்கொள்ள நன்றோ, தீதோ ?

**இந்தத் தனங்கொள்ள நன்மை**
**இந்தச் சீலங்கொள்ள ஆசனாமிர்தம்**
**உடுக்கப் புடவை கொள்ளக் கொள்ளும்**
**இந்த எருமை கொள்ள மெத்த நன்று**

**இந்தப் பசு கொள்ளப் பால் மெத்தக் கறக்கும்**
**எருது கொள்ள வியாதியாகும். சிலுகு வரும்**
**நாவிப்பிள்ளை கொள்ள புழுகு மெத்தவுண்டு நன்று**
**குதிரை கொள்ளக் குடிகேடு வரும்**

இந்த வாசகப்பலன் செல்வம், மேன்மை, ஆடை கால்நடைகள் பற்றியதாகும்

தனம் - செல்வம், தாவர சங்கம சொத்துக்கள்
சீலம் - கௌரவம், பாராட்டுதல், உயர்பதவி
ஆசனாமிர்தம் - பதவியோகம்
கொள்ளக் கொள்ளும் - வாங்கிக்கொள்ளப் போதுமானதாகும்
மெத்தநன்று - மிகவும் நன்று
சிலுகு - கொடுக்கல், வாங்கல், சச்சரவு
புழுகு - புனுகு (வாசனைச் சாந்து)
குடிகேடு - குடும்பத்திற்குக் கெடுதி வரும்.



### 106. தவசங் கொள்ள நன்றோ, தீதோ ?

**தவசங் கொள்ள நன்று**
**இந்தத் தனங்கொள்ளச் சண்டை உண்டு**
**இந்த நிலங்கொள்ள அதிகமாக வாழ்வான்**
**உடுக்கப் புடவை கொள்ளக் கொம்பு கொள்ளும்**

**எருமை கொள்ளக் கன்று செத்துப்போகும்**
**இந்தப் பசுவைக்கொள்ள வியாதிகொள்ளும் வேண்டாம்**
**எருது கொள்ள லாமில்லை. நன்றல்ல**
**நாவிப்பிள்ளை கொள்ளக் கொள்ளை போகும்**

இதனால் தானியம், தனம், நிலம், பிராணிகள் பற்றிய பலாபலன் அறிவிக்கப்படுகின்றது

தவசம் - தானியம் (முதல்வழி பெறும் வட்டி)
தனம் - பொருள், செல்வம்
அதிகமாக - வளர்ச்சியாக
கொம்பு கொள்ளும் - திருட்டு, அபகரிப்பு
கொள்ளை - திருட்டு, அபகரிப்பு

## 107. புதைத்த உடைமை காணுமோ, காணாதோ ?

**புதைத்த உடைமை காணாமல் ஒரு வருடத்திலே காணும்**
**தவசம் கொள்ள அற்ப லாபம்**
**இந்தத் தனாங் கொள்ளப் பரிபாலிக்கும்**
**உடுக்கப் புடவை கொள்ள - கிடையாது முக்காலறுப்பு**

**இந்த எருமை கொள்ள நன்றாய் வர்த்தனை உண்டு**
**இந்தப் பசுவைக் கொள்ள மெத்த வர்த்திக்கும்**
**எருது கொள்ள நன்மை உண்டாகும்**
**இந்த நிலங்கொள்ள தீர்க்கமுண்டு**

இந்த வாசகத்தால் புதைத்து வைத்த உடைமைகள், தானிய வியாபாரம், கால் நடைகள், நிலம் ஆகியவை பற்றிய பலன்கள் அறிவிக்கப்படுகின்றன.

புதைத்த உடைமை - புதைத்துவைத்த தன்னுடைய செல்வம்
தவசம் - தானிய வகைகள்
பரிபாலிக்கும் - தொடர்ந்து நடக்கும்
கிடையாது - பொருத்தமாக இல்லை
முக்காலறுப்பு - தறியில் முக்கால் அளவில் அறுக்கப்பட்டது அளவில் குறைவானது
வர்த்தனை - விருத்தி, வருமானம்
தீர்க்கமுண்டு - நிலையான பலன் தரும்



**108. இந்தக் கருமம் செயமாகுமோ, செயமாகாதோ ?**

**இந்தக் கருமம் செயமாக வரும்**
**புதைத்த உடைமை காணாமல், பின்பு காணும்**
**தவசங்கொள்ள அதிக லாபமுண்டு**
**இந்தத் தனங்கொள்ள விக்கினமுண்டு**

**இந்த நிலங்கொள்ள அதிக சம்பத்துண்டாம்**
**உடுக்கப் புடவை கொள்ள மெத்த நன்று கொள்ளும்**
**இந்த எருமை கொள்ளக் கண்ணோய் ஒரு முலை கெடும்**
**பசுக்கொள்ளக் கொள்ளை போகும். வேண்டாம்.**

இதனால் செய்த, செய்கின்ற, செய்யப்போகும் காரியம் பற்றிய பலாபலன் அறிமுகமாகின்றது

கருமம் – செய்த காரியம்
புதைத்த உடைமை – பூமியில் புதைத்து வைத்த திரவியம்
தவசம் கொள்ள – தானியங்கள் வாங்க
விக்கினம் உண்டு – குறைபாடு உண்டு
கொள்ளும் – சரியாக இருக்கும்
கொள்ளை போகும் – திருடர் கொண்டுபோய் விடுவர்

ஐுஞ

## 109. பொற்பனுதி பண்ணிவைக்க நன்றோ தீதோ ?

**பொற்பனுதி பண்ணிவைக்க நன்று**
**இந்தக் கருமம் செயமாகின்றது ஊழ்வினையாலாகும்**
**புதைத்த உடைமை காணாதது காணும்**
**தவசங்கொள்ள வெகு லாபமுண்டு.**

**இந்தத் தனங்கொள்ள அதிக லாபமுண்டு**
**இந்த நிலங்கொள்ள நடுவதுபால் தவக்கம் வரும்**
**உடுக்கப் புடவை கொள்ளக் களவு போகும்**
**இந்த எருமை கொள்ளக் களவு போகும் ; அலுவல் வரும்**

இதனால் திரவிய பாதுகாப்பும், நடைமுறைச் செயல்களும் பெறுகின்ற பலன் அறிமுகமாகின்றது

பொற்பனுதி - பொன்னைப் பிரித்துப் பாதுகாப்புச் செய்தல்
ஊழ்வினை - முன் பிறவியிலிருந்து வரும் வினை
காணாதது காணும் - முன் தேடியும் காணாதது இப்போது தெரியும்
நடுவதுபால் தவக்கம் வரும் - பாதி முயற்சியில் காரிய தாமதம் ஏற்படும்.
களவு போகும் - திருடு போகும்
அலுவல் வரும் - வீணான அலைவு வரும்



## 110. இவனை மனுவாக வைக்க நன்றோ, தீதோ ?

**இவனை மனுவாக வைக்க நன்று**
**பொற்பனுதி பண்ணிவைக்க நன்று**
**இந்தக் கருமம் ஒரு மனதாகச் செய்யவேண்டும்**
**புதைத்த உடைமை காணும். நன்று.**

**தவசங்கொள்ள நன்று. அதிக லாபம். செலவு பற்றுவார்கள்.**
**இந்தத் தனங்கொள்ளத் திரவியம் கூடாது. தாமதம்**
**இந்த நிலங்கொள்ளத் தீர்க்கமாயிருப்பான். நன்று**
**உடுக்கப்புடவை கொள்ள நோயின்றி நல்லுடம்பாவான்.**

இந்த வாசகத்தால், மனித உயர்வு தாழ்வு, சொத்துப் பாதுகாப்பு தனம் தானிய பலன் அறிமுகமாகின்றன

மனுவாக வைக்க - பொறுப்புள்ளவனாக ஒப்படைத்து வைக்க
பொற்பனுதி - பொன்னைப் பாகப்படுத்தி பாதுகாத்தல்
ஒரு மனதாக - ஒரே திட்டமாக, சலன புத்தியில்லாமல்
உடைமை - பொன், இரத்தினம், நகைகள்
திரவியம் - கூடிய தொகை, செல்வம்
தீர்க்கம் - நிலைத்த வாழ்வு
நல்லுடம்பு - நோயற்ற வாழ்வு



**111. இவனுக்கு இனிமேல் நன்மையுண்டோ இல்லையோ ?**

**இவனுக்கு இனிமேல் நன்மை உண்டு**
**இவனை மனுவாக வைக்க நன்று**
**பொற் பனுதி பண்ணி வைக்க நன்று**
**இந்தக் கருமம் இப்பொழுது செயமாகாது**

**புதைத்த உடைமை காணாமல் வருத்தத்தினாலே காணும்**
**தவசங் கொள்ள வெகு லாபமுண்டு**
**இந்தத் தலங்கொள்ளப் புத்திர சம்த்துண்டாம்**
**இந்த நிலங்கொள்ள அதிக சம்பத்துண்டாம்.**

இதனால் நினைத்த எதிர்காலம் பற்றிய பலாபலனும் உடைமைகள் பற்றிய எச்சரிக்கையும் சொல்லப்படுகின்றன

மனுவாக வைக்க - பொறுப்புள்ளவனாக வைக்க உயர் நிலையில் அமர்த்திவைக்க
பனுதி பண்ணுதல் - பாதுகாப்புச் செய்தல்
செயம் - காரிய வெற்றி
வருத்தத்தினால் - மிகுந்த பிரயாசையினால்
தவசம் கொள்ள - தானிய வியாபாரம் செய்ய
நிலம் கொள்ள - நிலத்தை வாங்கி உரிமை கொள்ள



## 112. குதிரை கட்டி வளர்க்க நன்றோ, தீதோ ?

**குதிரை கட்டி வளர்க்க நன்று**
**இவனுக்கு இனிமேல் நன்மை யுண்டு**
**இவனை மனுவாக வைக்கச் சண்டை வரும்**
**பொறுப்பனுதி பண்ணி வைக்க அதிகமாம்.**

**இந்தக் கருமம் தவிர்க்கப் பின்பு செயமாம், வயிரமுண்டு**
**புதைத்த உடைமை எப்படியும் காணும்**
**தவசங்கொள்ள நன்று, அதில் சிறிது சேதம் வரும்**
**இந்தத் தனங்கொள்ள மிகவும் பரிபாலிக்கும்.**

இதனால் அறிவிக்கப் பெறுவது, கால்நடை வாணிகம், தானிய வியாபாரம், சொத்துரிமை ஆகியவைகளாகும்.

குதிரை விலைக்கு வாங்கிக் கட்டி வளர்த்து – விற்றல் (வியாபாரம்)
மனுவாக – பொறுப்புள்ளவனாக
தவிர்க்க – நீக்குதல் செய்ய
வயிரமுண்டு – உறுதியானதாகும்
எப்படியும் காணும் – எந்த வகையிலும் தோன்றும்
தவசம் – தானியம்
பரிபாலிக்கும் – அனுபோகமாக வரும்

**113. இந்த ஊர் வாசலுக்கும் வீட்டிற்கும் வாசல் வீதி விட நன்றோ, தீதோ ?**

**இந்த ஊருக்கும் வீட்டுக்கும் வீதிவா சல்விட நன்று**
**இந்தக் குதிரை கட்டி வளர்க்க லாபம் உண்டு**
**இவனுக்கு இனிமேல் ஒரு சிவலையாலே நன்று**
**இவனை மனுவாக வைக்க நன்மை வரும்.**

**பொற்பனுதி பண்ணிவைக்க நல்லது, லாபம் கைகூடும்**
**இந்தக் கருமம் இப்போது தவிரும்; மனுசரொப்பினால் செயமாம்**
**புதைத்த உடைமை எப்படியும் காணும்**
**தவசங்கொள்ள மிகவும் லாபமுண்டு.**

இந்த வாசகத்தால் மனைக்கு முன்புறம் பற்றிய விசேடங்களும் உடைமைகள் பற்றிய செய்திகளும் அறிமுகமாகின்றன.

வீதிவாசல் - வீட்டு வாசலுக்கு முன்னர் சாலை வரையில் விடப்படும் இடம்
சிவலையாலே - சிறிய காரியத்தினாலே சிறிய மனிதராலே
மனுவாக வைக்க - பொறுப்புள்ளவனாக வைக்க
தவிரும் - நீங்கும்
மனுசர் - மனிதர்
தவசம் கொள்ள - தானியங்களைக் கொண்டு விற்க

**114. முத்து, புகையிலை, பருத்தி, பலசரக்குக் கட்ட நன்றோ, தீதோ ?**

**மூத்து புகையிலை பருத்தி பலசரக்கு கட்ட நன்று**
**இந்த ஊர் வாசலுக்கும் வீட்டுக்கும் வாசல்விட நன்று**
**இந்தக்குதிரை கட்டி வளர்க்க விலைப்படும்**
**இவனுக்கு இனிமேல் நன்மை உண்டு.**

**இவனை மனுவாக வைக்கச் சண்டை வரும்**
**பொற்பனுதி பண்ணிவைக்க இடையிலே தவறிப்போகும்**
**இந்தக் கருமம் செயமாகும்**
**புதைத்த உடைமை காணாமல் வருத்தத்தினாலே காணும்**

இதனால் விலை மதிப்புள்ள வியாபாரத்தைப் பற்றியும் குடும்ப நடைமுறைகளைப் பற்றியும் இந்த ஆரூடம் பேசுகின்றது

*பல சரக்கு - உணவு தயாரிப்பதற்கு உரிய தானியங்கள்*
வாசல் விட - முன்புற வாசலாக இடம்விட
கட்டி வளர்க்க - கட்டிப் பரிகரித்து வளர்க்க
விலைப்படும் - நல்ல விலைக்குப் போகும்
இடையிலே தவறிப்போகும் - இடைக்காலத்தில் காணாமல் போகும்
வருத்தத்தினாலே - தொடர்ந்து தேடுதலினாலே

## 115. இந்த சீமைக்குக் கலகமுண்டோ, இல்லையோ ?

**இந்தச் சீமைக்குக் கலகம் வரும்**
**முத்து புகையிலை பருத்தி பலசரக்குக் கொள்ள லாபமில்லை**
**ஊர்வாசலுக்கும் வீட்டிற்கும் வாசல்விட நன்று**
**இந்தக் குதிரை கட்டி வளர்க்க அதி லாபம்.**

**இவனுக்குச் சிவலையாலே வெகு நன்மையுண்டாம்**
**இவனை மனுவாக வைக்கப் பின்னால் வழக்காம்**
**பொற்பனுதி பண்ணிவைக்க களவிலே போகும்**
**இந்தக் கருமம் செயமாகாது.**

இந்தப்பகுதி நாட்டையும் வீட்டையும் பற்றிய நன்மை தீமைகளை அறிவிக்கின்றது

சீமை - (சீர்மை) நாடு
கலகம் - வாழும் மக்களாலும், அயலாராலும் கலகம் உண்டாதல்
முத்து - தூத்துக்குடிக்கடலில் விளைந்த முத்து (இரத்தின வகை)
சிவலை - சிறிது முயற்சி
பின்னால் - வருங்காலத்தில்
களவிலே போகும் - திருட்டினால் கைவிட்டுப்போகும்
செயமாகாது - நினைத்தபடி ஆகாது



**116. இவன் போனலும் ஓலை முகாந்திரத்தினால்**
**நன்றோ, தீதோ ?**

**இவன் போகவேண்டாம்; ஒலையினாலே வருவான்**
**இந்தச் சீமைக்குக் கலகமில்லை**
**முத்து, புகையிலை, பருத்தி, பலசரக்கு கட்ட நன்றாய் விடும்**
**இந்த ஊர்வாசத்துக்கு, வீதிவாசல் விட நன்று**

**குதிரையைக் கட்டி வளர்க்கக் களவு போகும்**
**இவனுக்கு இனிமேல் வெகு லாபம். நன்மை உண்டு.**
**இவனை மனுவாக வைக்கச் சில்லரையுண்டு ; நன்றல்ல**
**பொற்பனுதி பண்ணிவைக்க நன்மை வரும்.**

இந்த வாசகத்தினால், கடிதவழித் தகவல் ஊர் நிலைமை செல்வம் ஆகியவை பற்றிய குறிப்பு உணர்த்தப்படுகின்றன

ஓலை - கடிதம் - (தபால்) செய்தி கடிதம்
கலகம் - குழப்பமான சண்டை
கட்ட - வாங்கிச் சேர்க்க
ஊர்வாசல் - ஊர்மக்கள் புழக்கம்
களவு - திருட்டு
வெகுலாபம் - அதிக லாபம்
சில்லரை உண்டு - சிறுகுறைபாடுகள் உண்டு
பனுதி - பாதுகாப்பு, பிரித்து பதனப்படுத்தல்



## 117. பிணைப்பட நன்றோ, தீதோ ?

**புணைப்பட்டால் துரிசாப் பிணை தீரும்**
**இவன் போகின்ற காரியம் ஓலையினாலே ஆகாது**
**இந்தச் சீமைக்குக் கலகம் வரும். நல்லதாகப் போகும்**
**முத்து, புகையிலை, பருத்தி, பலசரக்கு - கட்ட நன்று தட்டழியும்**

**இந்த ஊர்வாசத்துக்கும் வீட்டிற்கும் வீதிவாசல்விட சிலநாள் நன்மையாம்**
**இந்தக்குதிரை கட்டி வளர்க்கப் பயனில்லை**
**இவனுக்கு இனிமேல் நன்மையுண்டு**
**இவனை மனுவாக வைக்க நன்மை உண்டு.**

வாழ்க்கையிலும், காரியங்களிலும், ஊரிலும் நடைமுறைச் செயல்களின் பலன்கள் இதனால் குறிக்கப்படுகின்றன.

புணைபடல் - (பிணை) ஒருவர் பெறும் கடன் தொகைக்கு உத்தரவாதமாதல்
துரிசாக - துரிதமாக, வேகமாகத் தீரும்
ஓலையினாலே - கடிதச் செய்தியினாலே
நல்லதாப் போகும் - நன்மை அமைந்ததாகப் போகும்
கட்ட நன்று - வாங்கி சேர்த்துவைக்க நன்மை
தட்டழியும் - தட்டுப்பாடு போய்விடும்



**118. இந்த ஊருக்குப் பயமுண்டோ, இல்லையோ?**

**இந்த ஊருக்குப் பயமில்லை**
**புணைப்பட்டால் துரோகம் உண்டு**
**இவன் போகின்ற காரியம் போகாமல் ஓலையிலாம்**
**இந்தச் சீமைக்குக் கலகம் வராது.**

**முத்து, புகையிலை, பருத்தி, பலசரக்கு – கட்ட நன்றாய் விற்றுப்பிரியும்**
**ஊர் வாசத்துக்கு வீதிவாசல் விடத் தீர்க்கமில்லை**
**இந்தக் குதிரை கட்டி வளர்க்க லாபமுண்டு**
**இவனுக்கு இனிமேல் வெகு லாபமுண்டு**

இதனால் ஊருக்கும் மக்களுக்கும் உண்டான சேதிகளும் வியாபார விபரமும் விளக்கமாகும்

புணை – நபர் உத்தரவாதம்
துரோகம் – நம்பிக்கைத் துரோகம்
பிரியும் – தேங்காது விற்பனையாகி விடும்
வெகுலாபம் – முன்னர் பெறாத லாபம்

**119. இந்த வழக்கு வெல்லுமோ, வெல்லாதோ ?**

**இந்த வழக்கு வெல்லும் நன்று**
**இந்த ஊருக்கு யாதொரு பயமுமில்லை**
**புணைப்பட வீணான ஈடுபாடு வரும்**
**இவன் போகும் காரியம் நன்று. ஓலையினாலாகாது**

**இந்தச் சீமைக்குக் கலகம் வந்து கொள்ளை போகும்**
**முத்து, புகையிலை, பருத்தி, பலசரக்கு – கட்டக் கிடந்து அழியும்**
**ஊர்வாசத்துக்கும் வீட்டிற்கும் வீதிவாசல்விட விக்கினமுண்டு**
**இந்தக் குதிரை கட்டி வளர்க்கக் கால் ஊனப்படும்.**

இதனால் வழக்கு,பிணை, நாட்டு நடப்பு இவைகள் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன

வழக்கு – நீதிமன்றம் போன வழக்கு
யாதொரு – எத்தகைய, எந்தவிதத்திலும்
வீணான ஈடுபாடு – அனாவசியமான தொடர்பு ஏற்படும்
(சம்பந்தமில்லாத தொர்பும் உழைப்பும்)
கட்டக்கிடந்து அழியும் – வாங்கிச் சேர்த்துவைக்க, விற்காமல் கிடந்து அழிந்து போகும்
விக்கினம் – குறைபாடு, துன்பம்
ஊனப்படும் – முடக்கம் ஏற்படும், குறைவு ஏற்படும்

□□□

## 120. இந்தப்பெண் திரட்சியாக நன்றோ, தீதோ ?

**இந்தப் பெண் திரட்சியாக நன்று**
**இந்த வழக்கு சார்பினாலே வெல்லும்**
**இந்த ஊருக்குப் பயமில்லை**
**புணை படக் குற்றம் வராது**

**இவன் போகின்ற காரியம் நன்றல்ல, ஒலை முகாந்திரத்தில் லாபம்**
**இந்தச் சீமைக்குக் கலகம் வராது. எண்ணிக்கையா மிருக்கும்**
**பருத்தி, புகையிலை, பலசரக்கு கொள்ள அழிந்துபோய் முதலாகாது**
**இந்த ஊர் வாசத்திற்கு, வீதிவாசல் விட நன்று.**

இந்த வாசகத்தால் பெண்ணைப்பற்றியும், ஊர் நடைமுறை வியாபாரம், மனை ஆகியவற்றைப்பற்றியும் தெரிவிக்கப்படுகின்றன

திரட்சியாக – பருவமடைய
சார்பினாலே – ஒத்தாசையினாலே, உதவியினால்
புணைபட – பிணைபட, நபர் உத்திரவாதம் தர
முகாந்திரம் – விசாரணை
எண்ணிக்கையாயிருக்கும் – அளவோடு இருக்கும்
முதலாகாது – மூலதனம் வராது
வாசம் – புழக்கம்



**121. இவரிடத்திலே சில வித்தை கற்க நன்றோ, தீதோ ?**

**இவரிடத்தில் சில வித்தைகளைக் கற்க நன்று**
**இந்தப்பெண் திரட்சியாக – மத்திபம்**
**இந்த வழக்கு இவனாலே வெல்லாது**
**இந்த ஊருக்குப் பயமில்லை. பாதுகாப்பு.**

**புணைபடக் கடுகத் தீர்ந்து போகும்**
**இவன் போகின்ற காரியம் நன்றல்ல. ஓலையினாலாகும்**
**இந்தச் சீமைக்குக் கலகம் வந்து நன்மையாகும்**
**மூத்து, புகையிலை, பருத்தி, பலசரக்கு – கட்ட நன்றாய்**
**விற்றுப்பிரியும், லாபமுண்டு**

இந்த வாசகம் மந்திரம் கற்றல், காரிய வகைகள், எதிர்பார்க்கும் பலன்கள் கூறுகின்றது

சில வித்தைகள் – சில மந்திர வித்தைகள்
திரட்சியாக – வயதுக்கு வர, பருவம் அடைய
பாதுகாப்பு – பாதுகாப்பாக இருக்கும்
ஓலையினாலாகும் – கடிதச் செய்தியினாலேயே நன்மை ஆகும்
விற்றுப்பிரியும் – விற்றுப்போய் விடும்
பிரியும் – தன்னிடமிருந்து மற்றவனுக்குப் போய்விடும்

□□□

## 122. இந்தப் பொருள் இவரிடத்திலே தாபரம் பண்ண நன்றோ, தீதோ ?

**இந்தப் பொருளிவரிடத்திலே தாபரம் பண்ண நன்று**
**இவரிடத்திலே சில வித்தைகளைக் கற்க நன்று**
**இந்தப் பெண் திரட்சியாக நன்று**
**இந்த வழக்குப்பெற, ஊரிலே வெல்லும்.**

**இந்த ஊருக்கு முன் வினையாகப் பயமுண்டு பாரமில்லை**
**புணைப்பாட்டால் தொல்லை வரும்**
**அவன் போகின்ற காரியம் நன்று. ஒலைமுகாந்திரத் திலாகாது**
**இந்தச் சீமைக்குக் கலகம் வராது.**

*இந்த வாசகத்தால் நம்பிக்கை, வித்தை காரியங்கள் ஆகியவை பற்றிய பலாபலன்கள் கூறப்படுகின்றன.*

தாபரம் - அடைக்கலம், பார்த்துக்கொள்ளச் செய்தல்
ஊரிலே வெல்லும் - ஊரிலே உள்ளவர்கள் வெல்லுவார்கள்
பாரமில்லை - பெருந்துன்பம் நிலையாக இல்லை
புணை - நபர் இணை
சீமை - வாழும் ஊர்



**123. இந்தப் பிள்ளையை வேறே வைக்க நன்றோ. தீதோ ?**

**இந்தப் பிள்ளையை வேறே வைக்க நன்று**
**இந்தப் பொருள் இவரிடத்திலே தாபரம் பண்ண நன்று**
**இவரிடத்தில் சில வித்தைகள் கற்க நன்று**
**இந்தப் பெண் திரட்சியாகச் சாபத்தினால் மலடியாவாள்.**

**இந்த வழக்கு புறமன்றில் வெல்லும்**
**இந்த ஊருக்குப் பயமுண்டு ; பாரமில்லை**
**புணைபடக் கடுகக் கழிப்படும்**
**இவன் போகின்ற காரியம் தாமதம். ஓலை முகாந்திரத்திலாகும்**

இந்த வாசகம் குடும்பம், அடமானம், வழக்கு,
காரியம் ஆகியவற்றைப்பற்றி உரைக்கின்றது

தாபரம் - நம்பிக்கைத்துணை, காவல், பாதுகாப்பு
வித்தைகள் - மந்திர வித்தைகள்
மலடி - பிள்ளைப்பேறு இல்லாதவள்
பிறமன்றில் - வேறு நீதிமன்றத்தில்
பாரமில்லை - நிலைப்பாக இல்லை
கடுக - மிகவிரைவாக
கழிப்படும் - நீங்கும்

**124. இந்தப் பிள்ளை சுகத்திலே இருக்குமோ, இருக்காதோ ?**

**இந்தப் பிள்ளை சுகத்திலே இருக்கும்**
**இந்தப் பிள்ளையை வேறாகவைக்க நன்று**
**இந்தப் பொருள் இவரிடத்தில் தாபரிக்க நன்று**
**இவரிடத்தில் வித்தை கற்கப் பலியாது**

**இந்தப்பெண் திரட்சியாகக் கணவனுக்குப் பொல்லாது**
**இந்த வழக்குச் சொன்னபேர் தங்களிலே பொருந்திப் போகும்**
**இந்த ஊருக்குப் பயந்தோற்றாது**
**புணைப்பட நன்றல்ல வேண்டாம்.**

இந்த வாசகத்தால் குடும்ப விபரங்கள், பொருள், கல்வி, வழக்கு இவை பற்றிய செய்திகள் அறிவிக்கப்படுகின்றன.

பிள்ளை - பருவமடைந்த பெண் பிள்ளை
வேறாக வைக்க - வேறாகக் குடித்தனம் செய்ய வைக்க
தாபரிக்க - அடைக்கலமாக வைக்க
பலியாது - பலிதம் உண்டாகாது
பொல்லாது - ஆகாது
திரட்சியாதல் - பருவமடைதல்
சொன்னபேர் - வழக்காளிகள்
பொருந்திப்போகும் - சமாதானமாகச் சேர்ந்து விடும்



## 125. ஊரிலே இருக்கிறபேர் சுகமே இருக்காரோ, இராரோ ?

**ஊரிலே இருக்கிறபேர் சுகமே இருக்கிறார்**
**இந்தப் பிள்ளை அதிஷ்டவானாவான்**
**இந்தப் பிள்ளையை வேறேவைக்க நன்று**
**இந்தப் பொருளிவரிடத்தில் தாபரம் பண்ண நன்று**

**இவரிடத்திலே வித்தை கற்க நன்றாய்ப் பலிக்கும்**
**இந்தப் பெண் திரட்சியாக அரசாங்குழியிலே சோபனமாம்**
**இந்த வழக்கு வெல்லாது, சம்மதியாய்ப் போகும்**
**இந்த ஊருக்கு இப்போது பயமில்லை.**

இதனால் தொலை தூரச்செய்தி, வித்தை,
குடும்பம் இவைகள் கூறப்படுகின்றன.

இருக்கிற பேர் - இருக்கின்ற உறவினர்
அதிஷ்டம் - யோகம், நல்ல பலன்
வேறே வைக்க - வேறாகக் குடித்தனம் வைக்க
தாபரம் - அடைக்கலம், கொடுத்து வைத்தல்
திரட்சியாக - பருவம் அடைய
சோபனம் - சுபச்செய்தி
சம்மதி - சம்மதம், சமாதானம்

**126. இந்தச் சுவாத்திய பலனான வித்தை படிக்க நன்றோ, தீதோ ?**

**இந்தச் சுவாத்திய பலன் நன்று**
**இந்த ஊரிலே இருக்கின்ற பேர்கள் ஊரிலிருக்கச் சுகமேயாகும்**
**இந்தப் பிள்ளை தீர்க்காயுசா இருக்கும்**
**இந்தப் பிள்ளையை வேறேவைக்க நன்று.**

**இந்தப் பொருளிவரிடத்தில் தாபரம் பண்ண ஆபத்துக்குதவாது**
**இவரிடத்தில் வித்தை கற்கப் பலியாது**
**இந்தப்பெண் திரட்சியாக ஓமசாங்கியம் பண்ண நன்று**
**இந்த வழக்கு ஒரு கருவலாலே வெல்லும்.**

இந்த வாசகத்தில் சொத்துரிமை, குடும்பம், சாந்தி வழக்கு
இவற்றுள் ஒன்று அறிமுகமாகின்றது

சுவாத்தியம் - தனது வாரிசு உரிமை, சொத்து உரிமை
தீர்க்காயுசு - நிறைந்த வயது
வேறே வைக்க - தனிக்குடுத்தனம் வைக்க
தாபரம் - ஸதாபித்தல், அடைக்கலமாக வைத்தல்
பலியாது - பலிதமாகாது
திரட்சியாக - பருவமடைய
ஓமசாங்கியம் - யாகஹோமத்தினால் செய்யும் சாந்திச் சடங்கு
கருவல் - வலிய செயல்



**127. இந்தப் பிழைப்பினால் லாபமுண்டோ இல்லையே ?**

**இந்தப் பிழைப்பினால் லாபம் உண்டு**
**இந்தச் சுவாத்தியத்துக்குப் போக நன்றல்ல**
**ஊரிலே இருக்கின்ற பேர்கள் நன்றாய் இருப்பார்கள்**
**இந்தப் பிள்ளை நன்றாய் வித்துவானாவான்**

**இந்தப் பிள்ளையை வேறே வைக்க நன்மையாகும்**
**இந்தப் பொருளிவரிடத்திலே தாபரித்தால் சிறிது கெடும்**
**இவரிடத்தில் வித்தை கற்க நன்று**
**இந்தப்பெண் திரட்சியாக வெகுசம்பத்துண்டாம்.**

இவற்றால் உரிமை, எதிர்பார்த்த நன்மை, திட்டம், வாழ்க்கை ஆகியவை அறிவிப்பாகின்றன.

பிழைப்பு - சீவனம், ஊழிய வாழ்க்கை
சுவாத்தியம் - சொத்துரிமை
வித்துவான் - கல்வியில் வல்லவன்
தாபரித்தல் - கொடுத்து வைத்தல்
திரட்சியாக - பருவமடைய நன்று



## 128. இவனுக்கும் நமக்கும் சினேகிதம் உண்டோ, இல்லையோ ?

**இவனுக்கும் நமக்கும் சிநேகிதமுண்டு**
**இந்தப் பிழைப்பினால் லாபம் சிறிதுநாள் நடக்கும்**
**இந்தச் சுவாத்திய பலன்கள் நன்று**
**ஊரிலே இருக்கிறபேர் சுகமே இருக்கிறார்.**

**இந்தப் பிள்ளை வியாதியாய் நலுங்கியிருப்பான்**
**இந்தப் பிள்ளையை வேறே வைக்கப் பாக்கியமுண்டு**
**இந்தப் பொருள் இவரிடத்தில் தாபரம் பண்ணவும்**
**இவரிடத்தில் வித்தை கற்கப் பலிக்கும்.**

இவற்றால் நம்பிக்கை, பிழைப்பு, குடும்பம்,
கல்வி ஆகியவை கூறப்படுகின்றன

சினேகிதம் - நட்புறவு (நண்பர்)
சுவாத்திய பலன் - தனது உரிமையாலான பலன்
நலுங்குதல் - நோயினால் நிலைகுலைதல்
பாக்கியம் - குடும்ப நன்மை
தாபரம் - கொடுத்துப் பாதுகாப்புச் செய்தல்
பலிக்கும் - சொன்னவாறு பலிதமாகும்

**129. இந்தப் புலவனிடத்தில் நாட்கவிதைகொள்ள நன்றோ, தீதோ ?**

**இந்தப் புலவனித்தில் நாள் கவிதை கொள்ள நன்று**
**இவனுக்கும் நமக்கும் சிநேகிதம் நன்றாய் நீளிக்கும்**
**இந்தப் பிழைப்பினால் அற்றைப்பு மிச்சமில்லை**
**இந்தச் சுவாத்தியப்பலன் வித்தையாஞ்சாடி பிறக்கும்; இப்போது வேண்டும்.**

**ஊரிலே இருக்குறபேர் ஒருத்தருக்கொருத்தர் விடையமுண்டாம்**
**இந்தப் பிள்ளை பாக்கியவான். ஆபத்துண்டு**
**இந்தப் பிள்ளையை வேறே வைக்க நன்று**
**இந்தப் பொருளிவரிடத்தில் தாபரிக்க மிகவும் நன்று.**

இவற்றால் வாழ்த்துதல், பிழைப்பு, செயல் திட்டம் ஆகியவை அறிவிக்கப்படுகின்றன

நாள்கவிதை – புலவர் பிரபுவின் பேரில் பாடிக்கொடுக்கும் வாழ்த்துப்பா
சிநேகிதம் – நல்ல நட்பு
நீளிக்கும் – நெடுநாட்கள் நீடிக்கும்
வித்தையாஞ்சாடி பிறக்கும் – உரிமை கைமாறிவிடும்
விடையம் – மனத்தாபம்
பாக்கியவான் – செல்வ யோகம் உடையவன்
பிள்ளையை – திருமணமான மகனை, மருமகனை
தாபரிக்க – கொடுத்து வைக்க



**130. இந்தக் குருக்களிடத்தில் தீட்சை கேட்க நன்றோ, தீதோ ?**

**இந்தக் குருக்களிடத்தில் தீட்சைபெற நன்று**
**இந்தப் புலவனிடத்தில் நாற்கவி கொள்ள நன்றல்ல**
**இவனுக்கும் நமக்கும் சிநேகிதம் எப்போதும் நடக்கும்**
**இந்தப் பிழைப்பினால் தன்னைக் காத்து நிற்கும்.**

**இந்தச் சுவாத்திய பலனான வித்தை கற்க நன்று**
**ஊரிலே இருக்கின்ற பேர்களில் ஒருத்தன் வெளிப்பட்டு வாரான்**
**இந்தப் பிள்ளைக்கும் தாயாருக்கும் குத்தம் வரும்**
**இந்தப் பிள்ளையை வேறே வைக்க நன்று.**

இவற்றால் ஆசாரம், வாழ்த்து, நட்பு, உரிமை, குடும்பம்
ஆகியவை அறிமுகப்படுகின்றன

தீட்சை - சைவ சமய தீட்சை, ஆசார விதிமுறை
குருக்கள் – ஒரு இனத்தவரின் சமயகுரு
நாற்கவி – ஆசுகவி, மதுரகவி, வித்தாரக்கவி, சித்திரக்கவி, ஆசிரியம்,
வெண்பா, விருத்தம், கலிப்பா ஆகியவற்றால் பாடப்பெறும் கவி
சுவாத்திய – தனக்கே உரிய, தனக்குப் பலனான
வெளிப்பட்டு – பிரிந்து புறப்பட்டு
குத்தம் – குற்றம், தவறுகள் குறைகள்

## 131. இந்தப் பிரயாணம் பண்ணி வெல்லுவானோ வெல்லானோ ?

**இந்தப் பிரயாணம் பண்ணி வெல்லுவான்**
**இந்தக் குருக்களிடத்தில் தீட்சை கேட்க மத்திபம்**
**இந்தப் புலவனித்தில் நாற்கவிகொள்ள நன்று**
**இவனுக்கும் நமக்கும் சினேகிதம் பிற்பகையாகும்**

**இந்தப் பிழைப்பினால் சிறிது நாளைக்கு லாபமுண்டு**
**இந்தச் சுவாத்திய பலன் சாடி சண்டையுண்டாம்**
**ஊரிலே இருக்கின்ற பேர்கள் ஒருவன் பெண்சாதிக்கு நலமில்லை**
**இந்தப் பிள்ளை தீர்க்காயுத்துண்டாமிருக்கும்**

இவற்றால் பிரயாணபலன், ஆசாரம், உரிமைகள், வாழ்வு ஆகியவை அறிமுகப்படுத்தப்படுகின்றன

பிரயாணம் - காரியமாக வெளியூர் செல்லல்
தீட்சை - சமய ஆசார விதி
நாற்கவி - வாழ்த்துக்கவி (நான்கு வகைக்கவி)
பேர்கள் - உறவினர்கள்
தீர்க்காயுசு - நிறைந்த வாழ்வு



**132. இவன் வெட்டுக்கேரினால் வெல்லுவானோ, வெல்லானோ ?**

**இவன் வெட்டுக்கேரினால் வெல்லுவான்**
**இந்தப் பிரமாணம் பண்ணி வெல்லுவான்**
**இந்தக் குருக்களிடத்தில் தீட்சைபெற நன்று**
**புலவனிடத்தில் நாற்கவி கொள்ள நன்று**

**இவனுக்கும் நமக்கும் சிநேகிதம் சிறிதுநாள் நடக்கும் பிற்பகை**
**இந்தப் பிழைப்பினால் நட்டம் வரும்**
**இந்தச் சுவாத்திய பலனான வித்தை நன்று**
**ஊரிலே இருக்கின்றபேர் சுகமேயிருப்பார்கள்**

இந்த வாசகத்தினால் தீமை, திட்டம், வாழ்த்து, பிழைப்பு
ஆகியவை அறிமுகமாகின்றன

வெட்டுக்கேரி - வெட்டுக்கொடுவாள்
பிரமாணம் - சத்திய வார்த்தை
தீட்சை - சமய ஆசார நியதி
பிற்பகை - பிற்காலத்தில் பகையாகும்
பிழைப்பு - வருமான உழைப்பு, ஊழியம்
சுவாத்திய பலனா வித்தை - தனக்க வேண்டியதைத் தரும் வித்தை
இருக்கின்ற பேர் - வெளியூரிலே இருக்கின்ற உறவினர்கள்

**133. இந்தப் புலியை, இவன் குத்துவானோ, குத்தானோ ?**

**இந்தப் புலியை குத்துவான் ; காயப்படுவான்**
**இவன் வெட்டுக் கேரினால் தோற்பான்**
**இந்தப் பிரமாணம் பண்ணவொட்டாமல் விலக்குவார்கள்**
**இந்தக் குருக்களிடத்தில் தீட்சைபெற மாகனம்**

**இந்தப் புலவனிடத்தில் நாற்கவி கொள்ள மத்திபம்**
**இவனுக்கும் நமக்கும் சிநேகிதம் நன்றாய் நீடித்து நடக்கும்**
**இந்தப் பிழைப்பினால் லாபம் உண்டு**
**இந்தச் சுவாத்திய பலனான வித்தை கற்கப்போக நன்று.**

இவற்றால் வினை, நடப்பு, ஆசாரம், பிழைப்பு, தன்னலம் ஆகியவை கூறப்பெறுகின்றன

புலியைக் குத்துவான் - புலியைக் கத்தியினால் குத்துவான் அபாய நீக்கம்
வெட்டுக்கேரி - வெட்டும் கொடுவாள்
தோற்பான் - போராட்டத்தில் தோல்வியடைவான்
பிரமாணம் - சத்தியவார்த்தை
மாகனம் - மிகப்பெருமை உண்டாகும்
நாற்கவி - வாழ்த்துக்கவி
பிழைப்பு - ஊழியம்
சுவாத்திய பலன் - தனக்குச் சாதகமான பலன்



## 134. இந்தப்புழி தீருமோ, தீராதோ ?

**இந்தப் பழி இப்போதைக்குத் தீராது**
**இந்தப் புலியைக் குத்த வெகுமானம் பெறுவான்**
**இவன் வெட்டுக்கோரினால் நல்லதாய் போம்**
**இந்தப் பிரமாணம் பண்ணி வெல்லுவான்**

**இந்தக் குருக்களிடத்தில் தீட்சைபெற உத்தமம்**
**இந்தப் புலவனித்தில் நாற்கவிகொள்ள வரத்தினை யில்லை**
**இவனுக்கும் நமக்கும் சிநேகிதம் இருசீராயிருக்கும்**
**இந்தப் பிழைப்பினால் லாமுண்டாய் வருவான்**

இவற்றால் வந்த வினை, நன்மை, வாழ்வியல் ஆகியவை
புலப்படுத்துகின்றன

இப்போதைக்கு - இப்பொழுது, இன்றைக்கு
வெகுமானம் - பரிசுகள்
நல்லதாய் போம் - பகை தீர்த்து நன்மையாகும்
பிரமாணம் - சத்திய வார்த்தை
வரத்தினை - வருமானம்
இருசீராய் - பட்டும் படாமலும் இருக்கும்



**135. யாத்திரை போக நன்றோ, தீதோ ?**

**யாத்திரை போக அழிவு வரும்**
**இந்தப் பழி பின்னடி தீரும்**
**இவன் புலியைக் குத்தினால் பிழை ; காயப்படுவான்**
**இவன் வெட்டுக்கேரினால் மரணம்**

**இந்தப் பிரமாணம் பண்ணித் தோற்று ஆபத்தால் வரும்**
**இந்தக் குருக்களிடத்தில் தீட்சைபெற வரத்தினை இல்லை**
**இந்தப் புலவனிடத்தில் நாற்கவி கொள்ள நன்று**
**இவனுக்கும் நமக்கும் சிநேகிதம் நன்றாய் கூட்டுறவாம்.**

இந்த வாசகத்தால் பிரயாணம், பாவச்செயல், வாழ்க்கைத் தேவைகள் புலப்படுத்துகின்றன

அழிவு - சேதம், நட்டம், முதலழிவு
பழி - குற்றம், அவச்செயல்
பின்னடி - பிற்காலத்தில்
பிழை - தவறாகும்
வெட்டுக்கேரி - கொடுவாள்
தோற்று - தோல்வி பெற்று
வரத்தினை - வரும் நன்மைகள்



**136. இந்த வியாதி நாட்டுப்பிணியோ தெய்வக்குறையோ ?**

**இந்த வியாதி தெய்வக்குறை. தெய்வத்திற்கிட நன்று**
**யாத்திரை போகச் சற்றே தாமதம்**
**இந்தப் பழி நடுவனால் பின்பு தீரும்**
**இந்தப் புலியைக் குத்தினால் காயப்படுவான்**

**இவன் வெட்டுக்கேரினால் முனைக்காயப்படுவான்**
**தோல்வையாகும்**
**இந்தப் பிரமாணம் பண்ணி வெற்றியாகி வருவான்**
**இந்தக் குருக்களிடத்தில் தீட்சைபெற நன்று**
**இந்தப் புலவனிடத்தில் நாற்கவி கொள்ள உத்தமத்தில் மத்திமம்**

இவற்றால் மனக்குறை, தற்காப்பு, வாழ்வு
ஆகியவை கூறப்படுகின்றது

தெய்வக்குறை – தெய்வத்தால் வந்த குறைபாடு
சற்றே – சிறிது காலம்
நடுவனால் – நியாயம் சொன்னவனால்
முனைக்காயம் – வாளின் முனைபட்ட காயம்
வெற்றி – வழக்கில் வெற்றி
உத்தமத்தில் மத்திமம் – மேன்மையில் சமன்.



**137. இந்த நோக்காடு கொண்டவன்**
**பிழைப்பானோ, சாவானோ ?**

**இந்த நோக்காடு கொண்டவன் சாவான்**
**இந்த வியாதி நாட்டுப்பிணி மருந்து கொள்ளத் தீரும்**
**யாத்திரை போக அற்ப பலன்**
**இந்தப் பழி கடுகத்தீரும்.**

**இந்தப் புலியை இவன் குத்தினால் தடையினால் பராபரிப்பான்**
**இவன் வெட்டுக்கேரினால் கல்லது கூடுவான் வெட்டிலல்லை**
**இந்தப் பிரமாணம் பண்ணிப்போய் மீள்வர் வழக்குக் கட்டார்**
**இந்தக் குருக்களித்தில் தீட்சைபெற உத்தமம்**

இந்த வாசகத்தினால் சரீரம், மனம், செயல், பயன்
ஆகியவை அறிமுகப்படுத்தப்படுகின்றன

நோக்காடு - நோயினால் வந்த சரீரக்கேடு
நாட்டுப்பிணி - தொற்றி வந்த நோய்
அற்ப பலன் - குறைவான பலன்
தடையினால் பராபரிப்பான் - தடுப்பினால் பாதுகாத்துக் கொள்ளுவான்
வழக்குக் கட்டார் - வழக்குத் தொடரமாட்டார்

**138. இந்த அபிசேகங் கொள்ள குணமாகுமோ, குணமாகாதோ ?**

**இந்த அபிசேகத்தினால் குணமுண்டு ; கொள்ளவும்**
**இந்த நோக்கோடு கொண்டவன் இப்போதைக்குப் பிழைப்பான்**
**இந்த வியாதி தெய்வத்தினாலும் மருந்தினாலும் குணமாகும்**
**யாத்திரை போகச் சண்டையாம். நன்மை**

**இந்தப்பழி தீராது. பழிக்குப்பழி வெட்டிக்கொள்வான்**
**இந்தப் புலியை இவன் குத்தினால், இவனுக்குச் சன்மானம் பண்ணுவிப்பார்**
**இவன் வெட்டுக்கேரினால் பரிசையினால் வெல்வன்**
**இந்தப் பிரமாணம் பண்ணி வெற்றியாகும்**

இவற்றால் உடல் நலம், தெய்வ நலம், உறுதிப்பாடு
ஆகியவை கூறப்பெறுகின்றன

அபிசேகம் - தலை முழுக்கு
நோக்கோடு - நோயினால் உண்டான துன்பம்
போக - சொல்ல
பழி - பழிச்சொல் (கொலை)
சன்மானம் - தீரத்திற்குரிய பரிசு
பரிசை - கேடகம்
பிரமாணம் - உறுதிச்சொல், மெய்



## 139. ஆடு மாடு ஒத்திப் பிடிக்க நன்றோ, தீதோ ?

**ஆடுமாடு ஒத்திப் பிழக்க நன்று**
**ஆளடிமை ஒத்திப் பிழக்க நன்றல்ல**
**இந்த அபிஷேகங் கொள்ளப் பொல்லாது**
**இந்த நோக்காடு கொண்டவன் பிழைப்பான்**

**இந்த வியாதி நாட்டுப்பிணி குணமாகும். பின்னையும் வரும்**
**யாத்திரை போகத் தாமதத்திலே காரியம் பலிக்கும்**
**இந்தப் பழி ஒரு பெண்ணாலே தீரும்**
**இந்தப் புலியை இவன் குத்தினாலிவன் சன்மான வெற்றியாக வருவான்**

இந்த வாசகங்களால் பொருள் முதலீடு செய்தல். பரிகாரம் செய்தல், பயணப்பலன், முயற்சித்திறன் ஆகிய பலன்கள் அறிவிப்பாகின்றன

ஒத்தி பிடித்தல் - பொருளைக் கொடுத்து ஒருவர் உடைமைளை ஈடாகப் பெறுதல்
அபிஷேகம் - தலை முழுக்கு
நோக்காடு - நலிவு செய்த நேரம்
வியாதி - உடலில் தோன்றிய நோய்
நாட்டுப்பிணி - தொத்து நோயாகப் பற்றியது
தாமதம் - காலதாமதம்
சன்மானம் - வெகுமதி



**140. உடைமை பல ஒத்தி பிடிக்க நன்றோ, தீதோ ?**

**உடைமை பல ஒத்தி பிடிக்க நன்று**
**ஆடு மாடு பிடிக்கச் சண்டை வரும்**
**ஆளடிமை ஒத்தி பிடிக்கச் சண்டை வரும்**
**இந்த அபிசேகங் கொள்ளப் பொல்லாது.**

**இந்த நோக்காடு கொண்டவன் பிழைத்தாலும் நோவு தீராது**
**இந்த வியாதி தெய்வத்தினாலும் மருந்தினாலும் குணமாகும்.**
**நன்று**
**யாத்திரைபோக அற்பவாதுடனே சடுதிக்கு மீள்வார்**
**இந்தப்பழி ராசகருத்தால் தீரும் ; பின்னுக்குத் துடரியாம்**

இவற்றால் தொழில், நிகழ்ச்சி, யாத்திரை ஆகியவற்றிற்குரிய
பலன்கள் கூறப்படுகின்றன

ஒத்தி – ஈடு கொள்ளுதல், பணம் கொடுத்து ஈடான பொருளைப் பெறுதல்
அபிசேகம் – மருத்துவப் படியான தலை முழுக்கு
யாத்திரை – தெய்வத் தலயாத்திரை
அற்பவாது – அற்பசபலம், சச்சரவு
ராச கருத்தாம் – அரசாங்க விதிகளால்
துடரியம் – தொடர்ந்து வரும்

**141. நிலம் ஒத்தி பிடிக்க நன்றோ, தீதோ ?**

**நிலம் ஒத்திப்பிடிக்க விக்கினம் வரும்**
**உடைமை பல ஒத்திப்பிடிக்க நன்று**
**ஆடு மாடு ஒத்தி பிடிக்கச் சேதமாகும்**
**ஆளடிமை ஒத்திப் பிடிக்கச் சேதமாகும்.**

**இந்த அபிசேகங் கொள்ள வியாதியாறும்**
**இந்த நோக்காடு கொண்டவன் வேதனையாய் நாள்சென்று தீரும்**
**இந்த வியாதி நாள்சென்று குணமாகும். நாட்டுப்பிணி**
**யாத்திரை போக நன்று. காரியம் பலிக்கும்**

இந்த வாசகத்தால் உடைமை, அடமானம், உடல்நிலை சுகவாழ்வு ஆகியவை கூறப்பெறுகின்றன

ஒத்தி பிடித்தல் - பொருள் அடமானம் வாங்குதல்
விக்கினம் - சிதைவு, குறைபாடு, துன்பம்
சேதம் - அழிவு, வீணாகிப் போதல்
அபிசேகம் - தலைமுழுக்கு
நாட்டுப்பிணி - தொற்று நோய்
காரியம் - சென்ற காரியம்



## 142. களவுக்குப் போக நன்றோ, தீதோ ?

**களவுக்குப் போகப் பலிக்கும் ; அகப்படும்**
**நிலம் ஒத்தி பிழக்க நன்று**
**உடைமை பல ஒத்தி பிழக்கப் பிசகு வரும்**
**ஆடு மாடு ஒத்தி பிழக்கச் சார்பிக்கும், நன்று**

**ஆளடுமை ஒத்தி பிழக்கச் சேதம் வரும்**
**இந்த அபிசேகத்தினால் வியாதிதீர நாள் செல்லும்**
**இந்த நோக்காடு கொண்டவன் மறுசனனம் போலப் பிழைப்பான்**
**இந்த வியாதி குணமாக நாள்செல்லும்.**

இவற்றால் ஆசைகள், அவலங்கள், அறிமுகப் படுத்தப்படுகின்றன

களவு - பிறரறியாமல் கொள்ளும் செயல்
அகப்படும் - பொருள், தாசி, அகப்படும்
பிசகு - மாற்றக் குற்றம்
மறுசனனம் - மறுபிறவி
நாள் செல்லும் - அதிக நாளாகும்



## 143. களவு போனது காணுமோ, காணாதோ ?

**இந்தக் களவு போனது காணும்**
**களவுக்குப் போக நன்றாய் அகப்படும்**
**நிலம் ஒத்தி பிடிக்கச் சண்டை வரும்**
**உடைமை பல ஒத்தி பிடிக்க நன்று.**

**ஆடு மாடு ஒத்தி பிடிக்கப் பொருள் சேதம் வரும்**
**ஆளடிமை ஒத்தி பிடிக்க அதில் மரணம் வரும்**
**இந்த அபிசேகத்தினால் குணமாகாமல் கொல்லும்**
**இந்த நோக்காடு கொண்டவன் பிழைக்க அரிது.**

இவற்றால் பாதுகாத்த பொருள், சீவன், உறவு, உடைமை வாழ்க்கை, நியதி ஆகியவை உணர்த்தப்பெறுகின்றன

களவு போனது - களவு போன பொருள்
களவுக்கு - திருட்டிற்கு
நன்றாய் - வேண்டிய அளவுடையதாக
ஒத்தி பிடிக்க - உடைமை ஈடு கொள்ள
அபிசேகம் - எண்ணெய்த் தலை முழுக்கு
நோக்காடு - உடலை நலிவிக்கும் நோய்



## 144. இந்தச் சிறை போனது காணுமோ, காணாதோ ?

**இந்தச் சிறை போனது சடுதியிலே வரும்**
**இந்தக் களவு போனது எங்கும் பிறக்கும்**
**களவுக்குப் போக வெட்டுப் படுவான் சேதம் வரும்**
**நிலம் ஒத்தி பிடிக்கத் தொடக்கமுண்டு**

**உடைமை பல ஒத்தி பிடிக்க லாபமுண்டு**
**ஆடு மாடு ஒத்தி பிடிக்க நன்று**
**ஆளடுமை ஒத்தி பிடிக்க நன்று**
**இந்த ஔடதத்தினாலே வியாதி ஆறும்.**

இந்தப் பகுதியால் சிறைபோன சீவன், களவுபோன பொருள் உடைமை பரிமாற்றம், சாதனங்கள் ஆகியவை பற்றிய செய்திகள் புலப்படுகின்றன.

சிறைபோனது - கைப்பற்றிச் சென்ற ஆண் பெண்
சடிதியில் - மிக விரைவில்
எங்கும் பிறக்கும் - எங்கும் புலனாகி விடும்
சேதம் - குறைபாடு, சிதைவு
தொடக்கம் - நல்லகாலத் தொடக்கம்
ஔடதம் - மூலிகைகளாலான மருந்து



## 145. போன உடைமை வருமோ, வராதோ ?

**போன உடைமை நன்றாகத்தானே வரும்**
**இந்தச் சிறைபோனது விடுதலைப்படும்**
**இந்தக் களவுபோனது எப்படியும் காணாது**
**களவுக்குப் போக ஒன்றுங் கிடையாது.**

**நிலம் ஒத்தி பிடிக்க மத்திபம்**
**உடைமை பல ஒத்தி பிடிக்க லாபமுண்டு**
**ஆடு மாடு ஒத்தி பிடிக்கச் சிறிது களவு போகும்**
**ஆளடுமை ஒத்தி பிடிக்க நன்று.**

இவற்றால் வந்தனவும், போனதுவும், ஆகக்கூடியனவும்
குறிப்பாக உணர்த்தப்படுகின்றன

நன்றாகத்தானே - சிதைவு, குறைவுபடாமல் தானாகவே
சிறை போனது - தெரியாமல் பற்றிச் சென்றது (பெண்)
விடுதலைப்படும் - தடை நீக்கி விடப்படும்
களவு போனது - களவு போன பொருள்
களவுக்குப்போக - திருடச் செல்ல
ஒத்தி பிடித்தல் - பொருள் ஈடுபெற்றுப் பணம் தருதல்
ஆளடுமை - ஆயுள் ஊழியம்.



## 146. நாலுகால் சீவன் காணுமோ, காணாதோ ?

**நாலுகால் சீவன் காணாது**
**போன உடைமை பிறத்தியிலே வரும்**
**இந்தச் சிறை சடுதியிலே வராது**
**இந்தக் களவுபோனது எப்படியுங் கண்டு வரும்**

**களவுக்குப் போகப் பொல்லாப்பு வரும்**
**நிலம் ஒத்தி பிடிக்க நன்று; லாபமுண்டு**
**உடைமை பல ஒத்தி பிடிக்க நன்று. அது கிடையா யமுங்கும்**
**ஆடு மாடு ஒத்தி பிடிக்கப் பின்பு சண்டை வரும்.**

இந்த வாசகத்தால் கைவிட்டுப்போன உடைமைகள்,
வரவு காணும் வகைகள் கூறப்படுகின்றன

நாலுகால் சீவன் - ஆடு, மாடு, எருமை முதலியன
போன உடைமை - களவு போன உடைமை
பிறத்தியிலே - பிறர் வழியாக
இந்தச்சிறை - இப்படி சிறையாகக் கொண்டு செல்லப்பட்ட பெண்
(சிறை - குறிப்பு)
பொல்லாப்பு - விரோதம்
கிடையாய் அமுங்கும் - சேர்ந்த குவியலாய்த் தங்கிவிடும்

## 147. இரண்டுகால் சீவன் காணுமோ, காணாதோ ?

**இரண்டு கால் சீவன் காணும்**
**நாலுகால் சீவன் வருத்தத்தினாலே காணும்**
**போன உடைமை வராது**
**இந்தச் சிறை விடுதலைப்பட்டுப் போம்.**

**இந்தக் களவு போனது ராசாவினாலே காணவேணும்**
**களவுக்குப் போக நன்றாய்ப் பலிக்கும்**
**நிலம் ஒத்தி பிடிக்க வெகு லாபமுண்டு**
**உடைமை பல ஒத்தி பிடிக்க அமுங்கும். மீளாது.**

இவற்றால் கைவிட்டுப்போன உறவு, தண்டனை, வருமானம் ஆகியவை பற்றிய பலாபலன் அறிமுகமாகின்றன

இரண்டு கால் சீவன் - மனிதர், பெண், ஆண்
நாலு கால் சீவன் - ஆடு, மாடுகள்
வருத்தத்தினாலே - முயற்சியினாலே
போன உடைமை - களவு போன உடைமை
சிறை - கைப்பற்றிப்போன பெண்
விடுதலைப்படும் - விட்டு விடப்படும்
அமுங்கும் - மீட்கப்பெறாமல் தங்கிவிடும்



**148. இவனைச் சேர்வை பண்ண நன்றோ, தீதோ ?**

**இவனைச் சேர்வை பண்ண நன்று. லாபமுண்டு**
**இரண்டுகால் சீவன் வருத்தத்தினாலே காணும்**
**நாலு கால் சீவன் காணும். வருத்தமில்லை**
**போன உடைமை சடுதியில் காணும்.**

**சிறை போட்டது சாமளவும் பொல்லாது**
**களவு போனது அங்க சாதனத்துடனே காணும்**
**களவுக்குப் போகத் துன்பம் வரும் ; கவரும்**
**நிலம் ஒத்தி பிடிக்க நன்றல்ல. வேண்டாம்.**

இவற்றால் களவில் போனவை தொடர்பு செய்யத்தக்கது
ஆகியவை தெரிவிக்கப்படுகின்றன

சேர்வை பண்ணுதல் - அதிகாரம் செய்யச் செய்தல்
வருதத்தினால் - அலைந்து திரிந்து தேடியதினால்
வருத்தமில்லை - அழிவில்லை

**149. இந்த நாட்டுக்குப் பயமுண்டோ, இல்லையோ ?**

**இந்த நாட்டுக்கு மாற்றான் வருவான் ; பயமில்லை**
**இவனைச் சேர்வைபண்ணினால் பொல்லாப்பில்லை**
**இரண்டு கால் சீவன் வர நாள் செல்லும்**
**நாலுகால் சிவன் கெட்டது. காணும்**

**போன உடைமை தேடினாலும் வராது**
**இந்தச் சிறை போட்டது ராசா வலுமையினாலே விடுதலைப்படும்**
**களவு போனது எப்படியும் காணாது**
**களவுக்குப் போக மெத்தப் பலிக்கும்.**

இந்த வாசகம்பலன் நாட்டு நடப்பு. களவுபோன சீவன் எண்ணிய கருமம் ஆகியவற்றைப்பற்றியதாகும்.

மாற்றான் – அயல்நாட்டான், பகைவன்
சேர்வை பண்ணுதல் – சார்ந்து வாழ்தல்
பொல்லாப்பு –குற்றம், தவறான செயல்
இரண்டு கால் சீவன் – மனித சீவன் (குறிப்பு)
கெட்டது – கைவிட்டுப் போனது, களவு போனது
சிறை போட்டது – சிறைக்குள் அடைக்கப்பட்டது
மெத்த – மிகவும்



## 150. இந்த வியாதி ஆறுமோ, ஆறதோ ?

**இந்த வியாதி திருவிளத்தினாலே ஆறும்**
**இந்த நாட்டுக்குப் பயம் ஒன்றுமில்லை**
**இவனைச் சேர்வை பண்ண லாபமுண்டு**
**இரண்டுகால் சீவன் கெட்டது. காணாது.**

**நாலுகால் சீவன் கொண்டவிடத்திலே காணும்**
**போன உடைமை கண்டு வராது. பிறகு நன்மை பண்ணுவான்**
**இந்தச் சிறைபோட்டது நாலிரண்டு நாளைமிலே**
**விடுதலையாகும்**
**இந்தக் களவு போனது எப்படியுங் காணாது.**

இந்த ஆருடப்பலன், தெய்வ பலன், கவளம், வருத்தம்,
விரயம்ஆகியவற்றை அறிவிக்கின்றது.

திருவுள்ளம் - தெய்வத்தின் அருள்
சேர்வை பண்ணுதல் - ஊழியம் செய்தல்
கொண்டவிடம் - விலைக்கு வாங்கிய இடம், வீடு
கண்டு வராது - முழுமையாக வராது
சிறை போட்டது - கைப்பற்றி மறைத்தது, சிறையில் பாதுகாவல்
செய்த சீவன்



**151. இந்த உலோகம் லாபமுண்டோ, இல்லையோ ?**

**இந்த லோகம் லாபமுண்டு**
**இந்த வியாதி பெருக்கும் ; பிணி ஆறாது**
**இந்த நாட்டுக்கு ராசா வலுமை இல்லை**
**இவனைச் சேர்வை பண்ணினால் லாபமில்லை.**

**இரண்டுகால் சீவன் துப்புனாலே தேடிக் காணும்**
**நாலுகால் சீவன் தாமதமாய் பின்பு காணும்**
**போன உடைமை வலுவினாலே காணவேணும்**
**இந்தச் சிறை போட்டது சில நாளைக்குப் பிறகு வரும்.**

இந்த வாசகங்களால் தொழில்மேன்மை, ஆதாயம், நம்பிக்கை ஆகியவற்றைப்பற்றி அறிவிக்கப்பெறுகின்றது

லோகம் - உலோகம், செம்பு, பித்தளை முதலியன
பெருக்கும் - வளரும்
வலுமை - திறமை
துப்பு - உளவுச் சொல்
தாமதமாய் - காலங்கடந்து நின்றதாய்
வலுவினாலே - பிடிவாதத்தினாலே
சிறை போட்டது - பட்டியில் அடைக்கப்பட்ட சீவன்

◘◘◘

## 152. இந்த ஊருக்குக் குடிபோக நன்றோ, தீதோ ?

**இந்த ஊருக்குக் குடிபோக அனேக நன்று**
**இந்த உலோகம் மிகதியும் பலனுண்டு**
**இந்த வியாதி எப்படியும் ஆறும்**
**இந்த நாட்டுக்கு யாவராலும் பயமில்லை**

**இவனைச் சேர்வை பண்ணினால் லாபமுண்டு**
**இரண்டுகால் சீவன் கண்டும் வராது**
**நாலுகால் சீவன் தன்னாலே காணும்**
**போன உடைமை தானே வரும் ; நாள் செல்லும்.**

இவற்றால் குடியிருப்பு, உடல் நலம், விரயம்
ஆகியவற்றைப் பற்றி அறிமுகமாகின்றன

குடிபோக – புதிதாகக் குடிபோக
மிகுதியும் – மிகுந்த லாபமாக
வியாதி – வந்த நோய்
இரண்டு கால் சீவன் – மனிதப்பிறப்பு ஆண், பெண்
தானே வரும் – தேட வேண்டாம். எடுத்தவரே திருப்பித்
தருவதாக அமையும்.

## 153. இவனுக்கு முன்னுக்கு நன்றோ, தீதோ ?

**இவனுக்கு முன்னுக்கு நன்மையாம்**
**இந்த ஊருக்குக் குடிபோக நன்மை**
**இந்த உலோகம் லாபம் உண்டு**
**இந்த வியாதிக்கு எதுபக்குவஞ் செய்தாலும் கொல்லும்**

**இந்த நாட்டுக்கு ராசாவலுமையினாலே பயம் போகும்**
**இவனைச் சேர்வை பண்ணினால் லாபமில்லை சேதம் வரும்**
**இரண்டுகால் சீவன் காணும்**
**நாலுகால் சீவன் எப்படியும் காணும்.**

இந்த பலன்களால் முயற்சி, மனவிரயம், கவலைகள்,
கவனம் ஆகிய செய்திகள் சொல்லப்படுகின்றன.

முன்னுக்கு - முற்பகுதியாக
குடிபோக - புதுகுடுத்தனம் போக
உலோகம் - செம்பு, பித்தளை முதலியன
சேர்வை பண்ணுதல் - சார்ந்து சம்பாதித்தல்
சேதம் - நட்டம், குறைவு



## 154. வெள்ளாட்டி கொள்ள நன்றோ, தீதோ ?

**வெள்ளாட்டி கொள்ள நன்மையாகும்**
**இவனுக்கு முன்னுக்கு நன்மையாகும்**
**இந்த ஊருக்குக் குடிபோக நன்மையில்லை**
**இந்த உலோகம் நன்மை உண்டாம்.**

**இந்த வியாதி ஆறும். மருந்து பண்ணவும்**
**இந்த நாட்டுக்குப் பயமில்லை, நன்மையாம்**
**இவனைச் சேர்வை பண்ணினால் லாபமில்லை. வேறே வியாதி**
**இரண்டு கால் சீவன் நாள் செல்லக் காணும்.**

இவற்றால் குடும்பத்தாணை வாழ்க்கை ஊழியம், வருவது
ஆகியவை பற்றிய பலன்கள் அறிவிக்கப்பெறுகின்றன

வெள்ளாட்டி - மனைவிக்குரிய பணிப்பெண்
முன்னுக்கு - முதலில் தொடக்கத்தில்
உலோகம் - உலோகம் வாங்க, விற்க
சேர்வை - சொன்னதைச் செய்தல்
இரண்டு கால் சீவன் - மனித சீவன்



**155. இந்தப் பிள்ளை தலை சுத்திக் கட்ட நன்றோ. தீதோ ?**

**இந்தப் பிள்ளை தலைசுத்திக் கட்ட நன்று**
**வெள்ளாட்டி கொள்ள நல்லது;**
**இவனுக்கு முன்னுக்கு நன்மை மத்திபம்**
**இந்த ஊருக்குக் குடிபோக நன்மை**

**இந்த உலோகம் லாபமுண்டு, மிகுதியும் நன்று**
**இந்த வியாதி மருந்தினாலே ஆறவேணும்**
**இந்த நாட்டுக்குப் பயமில்லை. பயந்தவன் வருவான்**
**இவனைச் சேர்வை பண்ணினால் லாபமில்லை**

இந்தப் பகுதியில் குடும்பப் பொறுப்பு, வாழ்க்கை, நாட்டுநிலை நினைப்பு ஆகியவை பற்றிய பலன்கள் அறிவிக்கப் பெறுகின்றன

தலைச்சுத்திக் கட்டல் - வயது வந்த ஆண் பிள்ளைக்குத் தலைப்பாகை அறிவித்தல்
வெள்ளாட்டி - இன்பத்துணைவி
முன்னுக்கு - முற்பகுதி காலத்தில்
குடிபோக - குடித்தனம் மாறிப்போக
ஆறவேணும் - குணமாக வேண்டும்
சேர்வை - ஊழியம்

## 156. இந்தக் கலியாண காரியம் நன்றோ, தீதோ ?

**இந்தக் கலியாணகாரியம் நன்று**
**இந்தப் பிள்ளை தலைசுத்திக்கட்ட உத்தமம்**
**வெள்ளாட்டி கொள்ள ஆகாது**
**இவனுக்கு முன்னுக்கு நன்மை உண்டு**

**அந்த ஊருக்கு குடிபோக நன்மையில்லை ; போக வேண்டாம்**
**இந்த உலோகம் எப்படியும் நன்மையில்லை**
**இந்த வியாதி சில நாளையிலே ஆறும். மருந்து பண்ணவும்**
**இந்த நாட்டுக்கு முன்னுக்குப் பொல்லாது.**

*இவற்றால் குடும்ப காரியங்கள், நடைமுறை வாழ்க்கை ஆகியவை அறிமுகமாகின்றன*

பிள்ளை - மகன், ஆண் பிள்ளை
தலைச்சுத்திக் கட்ட - தலைப்பாகை அணிவிக்க
உலோகம் - செம்பு, வெண்கலம் முதலிய உலோகங்கள்
ஆறும் - நலமாகும்



**157. இந்தக் களவு அங்க சாதனத்தோடு காணுமோ, காணாதோ ?**

**இந்தக் களவு அங்கசாதனையிலகப்படும்**
**இந்தக் கலியாணகாரியம் கைகூடும்; நன்று**
**இந்தப் பிள்ளை தலைசுத்திக்கட்ட சிலை சிரைப்புண்ணும்**
**வெள்ளாட்டி கொள்ள ஒழிப்போவாள்**

**இவனுக்கு முன்னுக்கு நன்மையுண்டாம்**
**இந்த ஊருக்குக் குடிபோகிறதிலிருக்கிறது நல்லது**
**இந்த உலோகத்தில் எப்படியும் நன்மையில்லை வேண்டாம்**
**இந்த வியாதி தெய்வகடாட்சத்தினாலே பொறுக்கும்**

இவற்றால் களவு போனது, கைவிட்டுப் போனது,
வியாபாரம் வியாதி நிலை ஆகியவை கூறப்பட்டுள்ளன.

களவு - களவு போன பொருள்
அங்க சாதனை - சாட்சியங்கள், தடயங்கள்
கைகூடும் - நன்றாக நிகழும்
தலை சிரைப்புண்ணும் - தலை வழுக்கையாகிவிடும்
கடாட்சம் - தெய்வத் திருவருள்



**158. இவர்கள் பிணக்கு உறவாகுமோ,**

**உறவாகாதோ ?**

**இவர்கள் பிணக்கு தவிர்த்து உறவாகும்**
**இந்தக் களவு அங்கசாதனையாய் விசாரிக்கும்போது**
**முந்தித்தானே பிறந்துபோம்**
**இந்தக் கலியாணகாரியம் ஆகாது**
**இந்தப் பிள்ளை தலைசுத்திகட்ட நன்மையாம்**

**வெள்ளாட்டி கொள்ள லாமுண்டு**
**இவனுக்கு முன்னுக்கு ஒரு பொல்லாங்குமில்லை**
**இந்த ஊருக்குக் குடிபோக வியாதி வரும். பொல்லாது**
**இந்த உலோகம் எப்படியும் சுகமுண்டு. நன்று.**

இவற்றால் மனமாற்றம், கெட்டுப்போனவை, வாழ்க்கை
தேவைகள் ஆகியவைகள் கூறப்படுகின்றன

பிணக்கு - மனமாறுபாடு, விரோதம்
தவிர்ந்து - நீங்கி, நீக்கமடைந்து
அங்க சாதனை- அடையாள சாட்சியங்கள்
தலை சுத்திக்கட்ட - தலைப்பாகை சுத்திக்கட்ட
வெள்ளாட்டி - இன்பத்துணைவி
பொல்லாங்கு - வருத்தம் தரும் தீங்கு
சுகமுண்டு - நன்மை உண்டு

**159. இந்த வீடு பரித்துக்கட்ட நன்றோ, தீதோ ?**

**இந்த வீடு பிரித்து அப்பாலே கட்ட நன்று**
**இவர்கள் பிணக்கு அலைந்து பின்பு தீரும்**
**இந்தக் களவு அங்க சாதனையாய்க் கண்டாலும்**
**நொந்து வரும்**
**இந்தக் கலியாண காரியம் ஆனாலும் ஆகாது**

**இந்தப்பிள்ளை தலைசுத்திக்கட்ட சற்று தட்டுப்பாடுண்டு**
**வெள்ளாட்டி கொள்ள அனேக லாபமுண்டு**
**இவனுக்கு முன்னுக்கு நன்மை நன்று**
**இந்த ஊருக்கு குடிபோக ஒரு காரியமும் ஆகாது.**

இதனால் மனை, களவு போனது, குடும்பம், சிந்தனை ஆகியவை பற்றிய பலாபலன்கள் அறிமுகமாகின்றன

அப்பாலே - அடுத்துள்ள இடத்திலே
பிணக்கு - குடும்ப விரோதம்
அலைந்து - சில நாட்கள் செயலாகி
நொந்துவரும் - சிதைந்துவரும்
ஆனாலும் ஆகாது - முடிவு செய்தாலும் நடைபெறாது



## 160. இந்த நாடு இவனுக்கு தீர்க்கமுண்டோ இல்லையோ ?

**இந்தநாடு இவனுக்குத் தீர்க்கமுண்டாய்ச் செல்லும்**
**இந்த வீடு பிரித்து அப்பாலே கட்ட நன்று**
**இந்தப் பிணக்கு, ராசா வலுமையினாலே உறவாகும் முன்வினை**
**இந்தக் களவு அங்கசாதனைக் கிடமில்லை**

**இந்தக் கலியாணம் ஆகிறாப்போலே மீண்டழியும்**
**இந்தப் பிள்ளை தலைசுத்திக்கட்ட நன்மையாகும்**
**வெள்ளாட்டி கொள்ள மத்திபம் ; வியாதி கொள்வான்**
**இவனுக்கு மூன்னுக்கு ஒரு பயமுமில்லை ; நன்மையாம்.**

இந்தப் பகுதியால் மனையைப்பற்றியும், உறவு பற்றியும் செயல் பற்றியும் சொல்லப்பெறுகின்றன

தீர்க்கம் - முழுமை, நெடுங்காலம்
அப்பால் - அடுத்த இடத்தில்
பிணக்கு - விரோதம்
ராசா வலுமை - அரசனின் உறுதி
தலைசுத்திக் கட்டல் - தலைப்பாகை அணிவித்தல்



## 161. இவனுக்குப் பேர் குடுக்க நன்றோ, தீதோ ?

**இவனுக்குப் பேர் கொடுக்க நன்று**
**இந்த நாடு இவனுக்குத் தீர்க்கமுண்டாய்ச் செல்லும்**
**இந்த வீடு பிரித்து அப்பாலே கட்டச் சம்பத்து வரும்**
**இவர்கள் பிணக்கு நாள்சென்று உறவாகும்**

**இந்தக்களவு பலப்பல வகையினாலுங் கண்டாலும் வராது**
**இந்தக் கலியாண காரியம் நன்று**
**இந்தப் பிள்ளை தலைசுத்திக்கட்ட மிச்சக்காரனா வான்**
**வெள்ளாட்டி கொள்ள வர்த்தனை உண்டாம். நன்று**

இவற்றால் உதவி செய்தல், மனை மாற்றம், சுபகாரியம் முயற்சி வாழ்க்கை நிலை ஆகியவை பற்றிய பலன்கள் கூறப்படுகின்றன

பேர் குடுத்தல் - தன் பெயரால் வாணிகம் செய்யச் செய்தல் (விலாசமளித்தல்)
சம்பத்து -நிறைந்த செல்வம்
நாள் சென்று - சிலகாலம் சென்று
மிச்சக்காரன் - பொருளை மிச்சப்படுத்துபவன்
வர்த்தனம் - வருமானம், வெகுமானம்.



**162. இந்த மருந்தினால் இந்த வியாதி தீருமோ தீராதோ ?**

**இந்த மருந்தினால் இந்த வியாதி பொறுக்கும்**
**இவனுக்குப் பேர் கொடுக்க நன்மை இல்லை**
**இந்த நாடு இவனுக்குத் தீர்க்கமுண்டாகிச் செல்லும்**
**இந்த வீடு பிரித்து அப்பாலே கட்டச் சாவன்**

**இவர்கள் பிணக்கு சண்டை நிமித்தம் வரும்**
**இந்தக் களவு அங்கசாதனையாய்த் தூரமறைந்து போகும்**
**இந்தக் கலியாண காரியம் தவிர்த்து சண்டை வரும்**
**இந்தப் பிள்ளை தலை சுத்திக்கட்ட தலைமயிரைப் புழுவெட்டும்**

இவற்றால் வாழ்க்கை, வழக்கம், மனை மாற்றம்,
சுபகாரியம் ஆகியவைகள் அறிமுகமாகின்றன

வியாதி பொறுக்கும் - நோய் தணியும்
பேர் கொடுக்க - தன் பெயரால் உதவி செய்ய

**163. ஆடு கொள்ள நன்றோ, தீதோ ?**

**ஆடுகொள்ள வரத்தினை உண்டாம்**
**இந்த மருந்தினால் வியாதி கடுகப்போம்**
**இவனுக்குப் பெயர் குடுக்கப் பலனில்லை, தப்பாது**
**இந்த நாடு இவனுக்கு எப்படியுஞ் செல்லும்**

**இந்த வீடுபிரித்து அப்பாலே கட்ட சகல சம்பத்துண்டாம்**
**இவர்கள் பிணக்கு ஒருகாலும் ஆறாது சண்டை**
**இந்தக் களவு எப்படியும் அங்கசாதனைக்கும் பிறக்கும்**
**இந்தக் கலியாண காரியம் நன்றாய் கூடும் வாழ்வான்.**

இவற்றால் அறியப்பெறும் ஆருடம், வருமானம், கால்நடை மனைவிருத்தி, மனக்கலக்கம் ஆகியவைபற்றியதாகும்

வரத்தனை - வரவு, வருமானம்
கடுகப்போம் - விரைவில் குணமாகிப் போகும்
தப்பாது - பலன் தப்பாது
அப்பால் - அடுத்த மனையிடத்தில்
பிணக்கு - விரோதம், மனக்கசப்பு
அங்க சாதனை - தடையமான சாட்சியம்
நன்றாய்க்கூடும் - சிறப்பாக அமையும்



**164. வேட்டைக்குப் போக நன்றோ, தீதோ ?**

**வேட்டைக்குப்போக வேட்டை அகப்படும் நன்று**
**ஆடு கொள்ள நன்றாய் வர்த்திக்கும்**
**இந்த மருந்தினால் இந்த வியாதி பொறுக்கும்**
**இவனுக்குப் பெயர் கொடுக்க மத்திபம்**

**இந்த நாடு இவனுக்குத் தீர்க்கமுண்டாகிச் செல்லும்**
**இந்த வீடு பிரித்து அப்பாலே கட்ட பிராண சேதம் வரும்**
**இவர்கள் பிணக்கு உறவின் முறையார் பேரிலே வரும்**
**இந்தக் களவு சடுதியிலே அங்கசாதனையால் அகப்படும்.**

இந்த வாக்கினால் முயற்சி, வியாபாரம், மனை, உறவு, களவு ஆகியவை பற்றிய பலன்கள் கூறப்படுகின்றன.

அகப்படும் - கிடைக்கும்
வர்த்திக்கும் - விருத்தியாகும்
பொறுக்கும் - தணியும்
தீர்க்கமுண்டாகிச் செல்லும் - உயர்வு உண்டாகி செல்வாக்கு ஏற்படும்
பிராணசேதம் - உயிர்ச்சேதம்
சடுதியில் - விரைவில்

**165. ஆயுதங்கொள்ள நன்றோ, தீதோ ?**

**இந்த ஆயுதங்கொள்ள மிகவும் நன்று**
**ஆடு கொள்ள பலனுண்டு நன்று**
**இந்த மருந்தினால் வியாதி பொறாது**
**இவனுக்குப் பெயர் குடுக்க மத்திபம் ; சம்பத்துக்குலையும்**

**இந்தநாடு இவனுக்குத் தீர்க்கமாய்ச் செல்லும்**
**இந்த வீடு பிரித்து அப்பாலே கட்டப் பிணக்காம்**
**இவர்கள் பிணக்குத் தங்களிலே உறவாகிப்போம்**
**வேட்டைக்குப் போக பலனுண்டு. நன்று.**

இந்த எண்களுக்குரிய பலன்கள், பாதுகாப்பு, வணிகம், மனை உதவிகள் முயற்சி ஆகியவை கூறப்பட்டுள்ளன.

ஆயுதங்கொள்ள – தற்காப்புக்குரிய ஆயுதங் கொள்ள
பொறாது – வியாதி தணியாது நீங்காது
சம்பத்துக் குலையும் – செல்வம் சிதைவாகும்
தீர்க்கமாக – நிறைவாக
பிணக்காம் – விரோதம் உண்டாகும்



## 166. இந்தச் சேவுகனால் நன்றோ , தீதோ ?

**இந்தச் சேவுகம்ஆள் மத்திபம்**
**ஆயுதம் கொள்ள மிகவும் நன்று**
**வேட்டைக்குப் போனால் பலிக்கும்**
**ஆடுகொள்ள அற்பலாபம் மத்திபம்**

**இந்த மருத்தினால் வியாதி பொறுக்கும். நன்று**
**இவனுக்குப் பேர் கொடுக்க அனேகம் வலுவாம்**
**இந்த நாடு இவனுக்குச் செல்லாது ; பாழாம்**
**இந்த விடு பிரித்து அப்பாலே கட்ட நன்மை.**

இவற்றால் ஆள் உதவி, ஆயுதம், வியாபாரம், வாழ்க்கைநிலை ஆகியவை அறிமுகமாகின்றன

சேவுகம் - (சேவகம்) பொறுப்புள்ள வேலையாள்
சேவகம் ஆள் - பொறுப்புடன் பணி செய்யும் ஆள்
பலிக்கும் - நினைத்தபடி கிடைக்கும்
அற்ப லாபம் - விற்பனையில் சிறிது லாபம்
பொறுக்கும் - தணியும், குணமாகும்
செல்லாது - உதவியாகாது.



## 167. இந்தப் பெண்ணை இவனுக்குக் கொடுக்க நன்றோ, தீதோ ?

**இந்தப் பெண்ணை இவனுக்குக் கொடுக்க நன்று**
**இந்தச் சேவுகம் ஆள் நன்றாயுதவுவான்**
**ஆயுதங்கொள்ள கேடு வரும்**
**வேட்டைக்குப் போக வேட்டை கிட்டாது**

**ஆடு கொள்ளப் பெருங்காத்திலே வர்த்திக்கும்**
**இந்த மருந்தினால் வியாதி நெடுநாள் நிற்கும்**
**இவனுக்குப் பேர்குடுக்க போருக்க மிகவும் நன்று**
**இந்த நாடு இவனுக்கு முட்ட நன்றாகச் செல்லும்**

இந்த எண்ணுக்குரிய இராசி, குடும்ப விருத்தி, உதவி, முயற்சி திட்டம் ஆகியவற்றின் பலன்களை அறிவிக்கின்றது

கொடுக்க – திருமணம் செய்து கொடுக்க
சேவுகம் ஆள் – (சேவகம் ஆள்) ஊழியத்திற்கமைந்த ஆள்
கேடு – கெடுதி, துன்பம்
வேட்டை கிட்டாது – வேட்டை கிடைக்காது கைக்குக் கிடைக்காது
பெருங்காத்திலே – மிகுந்த காற்றுள்ள காலத்திலே
வர்த்திக்கும் – இன விருத்தியாகும்
போருக்கு நன்று – இன்னாரின் ஆள் என்ற முறையில் போர் செய்தால் வெற்றி நன்று
முட்ட – செல்லும் – செல்வாக்கு நிறைவாகத் தொடரும்

நூல் நிறைவு



⊛ எதுரக்கோட்டை ராமானுஜ அய்யங்கார் குமாரன் அப்பையங்கார் சகாதேவ நூல் சாஸ்திரம்.

இது எழுதினது. ஆனைக்கூடம் நாட்டாண்மை அ. முத்துக்கருப்பப் பிள்ளை மகன் ***கஞ்ச பிள்ளை.***

வேணும் மீனாம்பிகை துணை





⊛ சுவடியின் நிறைவாக ஏடு செய்தவர், பிரதி செய்தவர் ஆகிய இருவரின் பெயர்களும் குறிக்கப்பட்டுள்ளன.

## வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை, பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, 'நாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்' என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறோம்.

**மாவட்ட ஆட்சித் தலைவர்**
**மற்றும்**
**இயக்குநர்,**
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்.